உ

ஓம்

பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 18 } ஆங்கீரஸஸ்ரீ கார்த்திகைமீ கடு { பகுதி 5
1932ஸ்ரீ நவம்பர்மீ 16உ

## கடவுள் வணக்கம்.

கானக மிலங்குபுலி பசுவொடு குலாவு நின்
கண்காண மதயானை நீ
கைகாட்ட வுங்கையா னெகிடிக் கெனப்பெரிய
கட்டைமிக வேந்திவருமே
போனக மமைந்ததென வக்காம தேனுநின்
பொன்னடியி னின்று சொலுமே
புவிராஜர் கவிராஜர் தவராஜ னென்றுனைப்
போற்றி ஜய போற்றி யென்பார்
ஞானகரு ணாகர முகங்கண்ட போதிலே
நவநாத சித்தர்களுமுன்
நட்பினை விரும்புவார் சுகர்வாம தேவர்முதன்
ஞானிகளு முனைமெச்சுவார்
வானகமு மண்ணகமும் வந்தெதிர் வணங்கிடுமுன்
மகிமையது சொல்லவெளிதோ
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுருவே மூலன்
மரபில்வரு மௌன் குருவே. (1)

மற்றுனக்கு மயக்கமென் வன்னெஞ்சே
கற்ற வார்சடைக் கண்ணுத லோனருள்
பெற்ற பேரவரேபெரி யோரெலாம்
முற்று மோர்ந்தவர் மூதுரை யர்த்தமே. (2)

ஆசைச் சுழற்கடலி லாழாமல் ஐயாநின்
நேசப் புணைத்தாள் நிறுத்தினு லாகாதோ. (3)

# அரும்பொருள் விளக்கம்

1. இதனால் முதல்வன் அருளை அடைந்தார் எல்லாம் வல்லவராவர் என்று விளக்குகின்றார்.

(இ-ள்) மந்த்ராசாரியனே! யோக தந்த்ராசாரியனே! திருமூலராது மரபில் வந்த மௌன குருவே! காட்டில் உலவும் புலியானது பசுவுடன் கூடி விளையாடும். உன் கண் காணும்படி மதயானையானது நீ கைகாட்டின மாத்திரத்தில் துதிக்கையால் தீமூட்டத்தின் பொருட்டுப் பெரிய கட்டை களை மிகவும் சுமந்துவரும். காமதேனுவானது நின் திருவடிக் கீழ் நின்று உணவு சித்தமாயிருக்கிறது என்று சொல்லாநிற்கும். பூலோகத் தரசரும், வித்துவான்களும் தேவரீரைத் தபோநிதி என்று புகழ்ந்து போற்றி ஜய போற்றி என்று புகழ்ந்துரைப்பார்கள். ஞானத்திற்கும் கருணைக்கும் இருப் பிடமாய் விளங்கும் நின் திருமுகம் கண்டமாத்திரத்தில் நவநாத சித்தர்களும் உனது சிநேகத்தை விரும்புவார்கள். சுகர் வாமதேவர் முதலிய ஞானவான் களும் உன்னைக் கொண்டாடுவார்கள். விண்ணுலகத்தாரும் மண்ணுலகத் தாரும் வந்து எதிரே நின்று தொழுகின்ற உன் பெருமையைப் புகழ்ந்து கூறுவது எளிதாகுமோ? என்க.

திருவருட் பெருஞ் செல்வராகிய தம்முடைய பரமாச்சாரியர் சந்நிதா னப் பெருமையைக் கூறிய முகத்தால், ஞானிகளுக்குள்ள எல்லாம் வல்ல தன்மையை விளக்கினர். எத்தகைய விரோதமும் அவர் சந்நிதானத்தில் நடவாதென்பார் "கானக மிலங்குபுலி பசுவொடு குலாவும்" என்றும், நெகிடி யைக் கண்டமாத்திரத்தில் அஞ்சியோடும் யானை அவர் திருமுன் அஞ்சாது அந்நெகிடிக்காகக் கட்டையை ஏந்திவரும் என்பார் "மதயானை நீ கைகாட் டவும் கையால் நெகிடிக்கெனப் பெரிய கட்டை மிக ஏந்திவரும்" என்றும், எத்தகைய அருமையான பொருளும் அவருக்கு எளிதாகக் கிடைக்கும் என் பார் "போனக மமைந்ததென அக்காமதேனு நின் பொன்னடியினின்று சொலும்" என்றும், அவருடைய தவத்திற்கு முன்னே செல்வமும் கல்வியும் தலையெடாது என்பார் "புவிராஜர் கவிராஜர் தவராஜன் என்றுனைப் போற்றி ஜய போற்றி யென்பார்" என்றும், அவரது திருமுகத்தினைக் கண்ட மாத்திரத்தில் எத்தகையாரும் மயங்கி வசியமாவர் என்பார் "ஞான கருணா கர முகங்கண்ட போதிலே நவநாத சித்தர்களுமுன் நட்பினை விரும்புவரர்" என்றும், உண்மை ஞானிகளும் அவரை வியந்துரைப்பார் என்பார். "சுகர் வாம தேவர் முதல் ஞானிகளு முனைமெச்சுவார்" என்றும், ஆதலால் அவருக் கேலாத காரியம் எவ்வுலகத்துமில்லை யென்பார் "வானகமும் மண்ணக மும் வந்துதாள் வணங்கும்" என்றுங் கூறினர். இதனால் முதல்வன் அருளை யடைந்தார் எல்லாம் வல்லவராவர் என்பதாயிற்று.

2. (இ-ள்) வலிய மனமே! உனக்கு இன்னும் மயக்கம் உண்டாவதற் குக் காரணம் என்ன? திரண்டு நீண்ட சடையையுடைய நெற்றிக் கண்ண னது அருளைப் பெற்றோராகிய அவர்களே ஞானிகளும் வேதப் பொருள்களை யெல்லாம் முழுதும் உணர்ந்தவர்களுமாவார்கள் என்க.

(3) ஐயனே! ஆசையாகிய சுழற் கடலில் அழுந்தாமல், விரும்புதற் குரிய நின் திருவடியாகிய மரக்கலத்தினை நானடைய நிலை நிறுத்தினால் ஆகாதோ? என்க.




## தமிழ்நாட்டுப் பெண்கள் மகாநாடு





சிறிது காலமாக நமது நாட்டுப் பெண் மக்களிடம் ஒருவித விழிப்பு ஏற்பட்டு வருவதைக் கண்டு நாம் மகிழ்ச்சி பெருக்கடைகின்றோம். தேசீயத் துறையிலும் சமூகத்துறையிலும் கல்வித் துறையிலும் பல பெண்மணிகள் குறிப்பிடத்தக்க நற்றொண்டாற்றி வருகின்றனர். அகில இந்தியப் பெண்கள் சங்கமும் பிற சங்கங்களும் செய்துவரும் அரிய ஊழியத்தின் பயனாக நமது நாட்டுப் பெண் மக்களின் குறைகளும் தேவைகளும் பொது ஜனங்களின் உள்ளங்களில் நன்கு பதிந்திருக்கின்றன என்றே கூறவேண்டும். சுமார் பத்து அல்லது பதினைந்து ஆண்டுகட்குமுன் பெண்ணுரிமை என்றால்—அதாவது பெண்கட்குக் கல்வி வேண்டும், செல்வம் வேண்டும், விதவை மணம் வேண்டும், குழந்தை மணம் கூடாது என்றால்—நாடு திடுக்கிடக்கூடிய நிலைமையில் இருந்தது. அடுப்பூதும் பெண்கட்குப் படிப்பு எதற்கு? புருஷர் இருக்கும்போது பெண்கட்குச் செல்வம் எதற்கு? அவர்கட்குச் செல்வம் இருந்தால் சொன்னபடி கேட்கமாட்டார்களே! கைம்பெண்கட்குக் கலியாணம் செய்தால் குடிகெட்டுப் போகும்—விருத்தியாகாது. செல்லக் கலியாணம் (குழந்தை மணம்) செய்தால் சீருடனே வாழ்வார்கள் என்ற மனோபாவமே முன்னர் நாடெங்கும் நிறைந்திருந்தது. இப்பொழுது அத்தகைய மனப்போக்கு மலையேறிவிட்டது என்றே துணிந்து கூறிவிடலாம். இக்காலத்தில் பெண்மணிகள் கல்வியில் கவனம் செலுத்தத் தொடங்கியிருக்கின்றனர். பட்டக் கல்வி கற்ற பெண்களின் தொகையும் ஆண்டுதோறும் வளர்ந்துகொண்டு வருகிறது. பெண்களுக்கென்று தனியாக ஆரம்ப பாடசாலைகளும், உயர்தர கலாசாலைகளும், கல்லூரிகளும் ஆங்காங்கு நிறுவப்பட்டிருக்கின்

றன. பெண்கட்குச் சொத்துரிமை வேண்டும் என்ற கிளர்ச்சி ஒரு பால் நிகழ்ந்துகொண்டிருக்கிறது. ஆண்டுதோறும் விதவாவிவாகங் களின் எண்ணிக்கை பெருகி வருதல் குறிப்பிடத்தக்கது. பாலிய மணங்களை ஒழிக்கச் சாரதாச் சட்டமும் இருந்து வருகிறது. இவை யெல்லாம் ஓரளவு திருப்தி தரக்கூடியவையாயினும் நமது நாட்டின் இழிநிலையையும் பிறநாடுகளின் முற்போக்கு வேகத்தையும் ஒப்பிட்டு நோக்கும்போது பெண் மக்கள் விஷயத்தில் இப்போது காணப்படும் அபிவிருத்தித் தோற்றமெல்லாம் கடலிற் கரைத்த பெருங்காய மாகவே மதிக்கவேண்டி யிருக்கிறது. எனினும் பன்னூற்றாண்டுக ளாகச் சுதந்தரம் அற்று அடிமைக் குழியில் ஆழ்ந்துகிடந்த பெண் ணுலகம் இப்பொழுது விழித்துக் கொண்டு முன்னேற்றத்தில் நாட் டம் செலுத்தத் தொடங்கியது ஒரு வகையில் ஆறுதலா யிருக்கிறது என்பதே நமது கருத்து. நாட்டு ஜனத்தொகையிற் பாதிப்பேர்க ளாக விளங்கும் பெண்மணிகளின் நலத்தைப் பேணுங் கடமை ஆண் மக்களைச் சார்ந்தது என்பதை ஒவ்வொருவரும் நினைவில் வைத்துக் கொள்ளல் வேண்டும். பெண்கள் முன்னேற்றமே நாட்டு முன்னேற்ற மாகும். கல்வியும் செல்வமும் வாய்ந்து அநுபவ அறிவாற்றலுடன் சுதந்தரமாய் விளங்கும் ஆடவர்கள் பெண்மணிகட்குத் தக்க வழி காட்டிகளாய் அவர்களைச் செந்நெறிப்படுத்த முந்தவேண்டும். இப் பொழுது பெண்மணிகள் தனிச் சங்கங்கள் கண்டு தங்கள் உரிமை களைப்பற்றிய தீர்மானங்களை அடிக்கடி வெளியிட்டு வருகின்றனர். இம்முறையில் தமிழ் நாட்டுப் பெண்கள் மகாநாட்டின் ஆண்டுக் கூட் டம் சென்ற அக்டோபர் மாதம் 29-ம் தேதி கோவையிற் திரிச்சி மிஸஸ் ஜேஸுதாஸ் அம்மையாரின் தலைமையில் நடைபெற்றது. அவ்வம்மையார் நிகழ்த்திய சொற்பொழிவும் அம்மகாநாட்டுக் கூட் டம் நிறைவேற்றியுள்ள தீர்மானங்களும் பொன்னேபோற் போற்றத் தக்கவை யாகும். அவற்றை ஒரு சிறிது ஆராய்ந்து தமிழ் மக்கட்கு எடுத்துக் காட்டவே இத்தலையங்கம் வரையத் துணிந்தோம்.

தமிழ்நாட்டுப் பெண்கள் மகாநாட்டில் தலைமை வகித்த மிஸஸ் ஜேஸுதாஸ் அம்மையார் "வகுப்புவாதம், சுயநலம், கொடிய வழக் கங்கள் முதலியவை தென்னிந்தியாவில் அதிகம். வாய்ச்சொல் வீரத் தில் நாம் முன்னணியில் நிற்கின்றோம். காரியத்தில் பின்னிற்கின் றோம். நம்முடைய அரசியல் வாதிகள் பேசுவதில் பேர் போனவர் கள்" என்று முதன் முதலாகத் தென்னாட்டின் உண்மைப் பொது நிலைமையை எடுத்துக் காட்டிவிட்டுத் தீண்டாமை விலக்கு, சாரதாச் சட்டம், பெண்களின் சொத்துரிமை, விவாகரத்து, பெண்கல்வி முத லிய விஷயங்களைப்பற்றி உருக்கமாகவும் சுருக்கமாகவும் தெளிவாக வும் அறிவுறுத்தி யிருக்கிறார். இம்மகாநாட்டில் நிறைவேறிய தீர் மானங்களில் முக்கியமானவை வருமாறு:—

தீண்டாமையை விலக்கி ஹிந்து ஆலயங்களைத் தாழ்த்தப்பட்ட மக்கட்குத் திறந்து விடவேண்டும்.

ஸ்தல ஸ்தாபனங்கள் ஆரம்ப கட்டாயக் கல்விச் சட்டத்தைத் தமது எல்லைக்குள் அமலுக்குக் கொண்டு வரவேண்டும்.

பொதுஜனங்கள் உள்நாட்டுக் கைத்தொழில்களை ஆதரிக்க வேண்டும்.

பொதுஜனங்கள் ஏழைகட்கும் அநாதைகட்கும் தருமாலயங்களை நிறுவவேண்டும்.

சிசு பிரசவ மரணங்கள் அதிகமாயிருப்பதால் அரசாங்கத்தார் பல மருத்துவச்சிகள் பயிற்சி சாலைகளை மாகாண மெங்கும் நிறுவ வேண்டும்.

பொதுஜனங்கள் சாரதாச்சட்ட விதிகட் குட்பட்டு நடந்து கொள்ளவேண்டும்.

நேயர்கள் இத்தீர்மானங்களைக் கூர்ந்து சிந்திப்பார்களாக. மிஸஸ் ஜேஸுதாஸ் அம்மையார் கூறியதுபோல் நமது தென்னாட்டில் வகுப்புவாதம், சுயநலம், கொடிய—பொருளற்ற வழக்க வொழுக்கங்கள் நிறைந்து கிடக்கின்றன என்பது கண்கூடு. இவற்றை யொழிக்க எந்தத் தலைவரும் முன்வருவதில்லை. அரசியல் மேடைகளில் ஆடம்பரத்துடனும் ஆரவாரத்துடனும் அழகிய சொற்பொழிவுகள் நிகழ்த்துவதில் நமது தென்னிந்தியத் தலைவர்கள் பலே நிபுணர்கள் என்பது உலகப் பிரசித்தம். சமூகத்துறையில் பல அநாசாரமான—அர்த்தமற்ற சம்பிரதாயங்கள் இருந்து வருதல் இத்தலைவர்கள் அறியாத விஷயம் அல்ல. நாட்டுவிடுதலைக்கு வகுப்புவாதம் ஒழிந்து தேசீய ஒற்றுமை ஏற்படவேண்டும். நமது தேசீய ஒற்றுமைக்குச் சாதி சமய வேற்றுமை தீண்டாமை பெண்ணடிமைமுதலிய கொடுமைகள் இடையூறாக இருந்து வருகின்றன. அரசியல் தொண்டாற்றுவதாகப் பறைசாற்றிக் கொண்டிருக்கும் தலைவர்கள் என்போர் தேசீய ஒற்றுமைக்கு அடிப்படையாய் விளங்கும் சமூக முன்னேற்றத் துறையில் உண்மையான சிரத்தையும் கருத்தும் செலுத்தாமல்—ஒட்டியும் ஒட்டாமலும் பேசியும் எழுதியும் வருவது வருந்தக்கக்கது. "தீண்டாமையானது முதன் முதலாகப் பள்ளிக்கூடங்களிலும், பொது ஸ்தலங்களிலும், கோவில்களிலு மிருந்து ஒழியவேண்டும். பிறகு அது சமூகக் கூட்டங்களிலிருந்து விலக வேண்டும். நமது ஜனங்கள் தயாராகும் பொழுது சமூகங்களுக்குள் விவாகங்களும் ஜாதிகள் ஒழிவதும் சாத்தியப்படும். இதைச் செய்யப் பொதுஜன அபிப்பிராயத்தை வலுக்கச் செய்யவேண்டும். நம்மால் கூடிய மட்டும் சேரிகளில் சமூக முன்னேற்ற வேலைசெய்ய வேண்டும்" என்று ஸ்ரீமதி ஜேஸுதாஸ் அம்மையார் கூறினார். இம்மொழிகள் நமது அரசியல் தலைவர்கள் என்போரின் செவிகள் ஏற்றுக்கொள்ளுமா

என்று கேட்கின்றோம். இவர்கள் இவ்வுண்மைகளை மனமார ஏற்றுக்கொண்டாலும் கொள்ளாவிட்டாலும் காலதேவதை அவற்றை ஏற்றுக்கொண்டு தீரவேண்டும் என்று கட்டாயப்படுத்தி வேண்டா விருப்புடனுவது பிரசாரம் செய்ய அவர்களைத் தூண்டி வருவது ஒரு வகையில் மகிழ்ச்சிக்குரிய விஷயமாகும். சமீபத்தில் சென்னை சட்ட சபையில் டாக்டர் சுப்பராயன் அவர்கள் கொண்டுவந்த தீண்டாமை விலக்குத் தீர்மானம் நிறைவேறியது குறித்து மகிழ்ச்சிப் பெருக்கடைகின்றோம். ஆனால் இது வெறுந் தீர்மானம். தீண்டாமை விலக்கும் எல்லாருக்கும் ஆலயப்பிரவேச உரிமையும் கிடைக்குமாறு விரைவில் சட்டம் செய்யப்படவேண்டும். இத்தகைய சட்டம் நிறைவேறினுலொழிய நடைமுறையில் ஒரு சிறிதும் பயன்காண முடியாது.

சாரதாச் சட்டம் குழந்தை மணத்தைத் தடை செய்ய எழுந்தது. அதைப் படித்தசாஸ்திரிகள் என்பவர்களும் பண்டிதர்கள் என்பவர்களும் கடுமையாகத் தாக்கி எதிர்த்துக் கொண்டிருக்கின்றனர். ஒன்று மறியாத பச்சிளங் குழந்தைகட்கு மணம் செய்தல் கூடாது—பாவம் என்ருல் அதற்குச் சாஸ்திரங்களையும் சம்பிரதாயங்களையும் முட்டுக்கட்டையாகக் காட்டி எதிர்த்தல் என்ன முறை என்று கேட்கின்றோம். அறிவுவேண்டும் ஞானம் வேண்டும் என்று ஓலமிடும் இக்கூட்டத்தினர் இவ்விஷயத்தில் பகுத்தறிவுடன் நடந்து கொள்ளவில்லையே என்று பெரிதும் வருந்துகின்றோம். இவர்கள் தான் பழமைப் பற்றுள்ளங்கொண்டு சாரதாச்சட்டத்தை எதிர்க்கின்ருர்கள் என்ருல் ஒரு சில தேசியத்தலைவர்கள் என்போரும் அரசியல் நிபுணர்கள் என்போருங்கூட அச்சட்டத்தைத் தொலைத்து விடத் துணிந்திருக்கின்றனர் என்பதை நினைக்கும்போது எமக்கு மிகுந்த ஏமாற்றம் உண்டாகிறது, "இப்பேர்ப்பட்ட மனிதர்களைச் சட்ட சபைக்குள் நுழைய விடக்கூடாது" என்று ஸ்ரீமதி ஜேஸுதாஸ் அம்மையார் கூறுவதை நன்கு கவனிக்குமாறு எல்லோரையும் வேண்டுகிறோம். பெண்கள் மகாநாட்டின் முழுச்சக்தியையும் அவ்வங்கத்தினர்கட்கு எதிரிடையாக உபயோகிக்க வேண்டும் என்று அம்மையார் வீரமுழக்கம் செய்திருக்கிருர். இதை ஒவ்வொரு பெண் மணியும் நினைவில் வைத்துக் கடனாற்ற வேண்டுகின்றோம்.

பெண்மணிகட்குச் சொத்துரிமை வேண்டும் என்ற உணர்ச்சி நாளுக்குநாள் வலிமைபெற்று வருகிறது. ஆணும் பெண்ணும் சமத்துவ உரிமை பெருத எந்நாடும் பெருமை அடைய முடியாது. ஆதலால் ஹிந்துப்பெண்கட்கு ஆடவர்களைப் போலவே சொத்துரிமை வேண்டும் என்று அம்மையார் விரும்பியது முற்றிலும் நியாயமேயாகும். விவாகரத்து என்ருல் நமது நாட்டில் பலர் திடுக்கிட்டுத் துள்ளி விழுகின்றனர். ஹிந்துக் குடும்பங்களில் பெண்கட்குப் பல விதமான இன்னல்களும் கொடுமைகளும் உண்டு. ஆடவர்கள் துர்

நடத்தை வாய்ந்தவர்களாகவும், பல பெண்களை மணந்துகொள்ளும் உரிமை வாழ்ந்தவர்களாகவும் இருப்பது பிரத்தியக்ஷம். ஆனால் பெண்மணிகளின் நிலைமை பரிதாபகரமானது. கல் லென்றாலும் கணவன் புல்லென்றாலும் புருஷன் என்ற மனப்பான்மையுடன் வாழ்க்கை நடத்தவேண்டிய நிர்ப்பந்தத்தில் வைக்கப்பட்டிருக்கிறார்கள். ஆனால் பழைய சோற்றுக்கு விசிறிகொண்டு வரவேண்டிய காலமும், கணவன் அழைத்தவுடன் கிணற்றில் தண்ணீர்க் கயிற்றை அப்படியே விட்டுவிட்டு வரவேண்டிய காலமும், அழுகிப் புழுத்துப் போன குஷ்டரோகியைத் தாசி வீட்டுக்குக் கூடையில் வைத்துத் தூக்கிக் கொண்டுபோய்விடும் காலமும் போய்விட்டது. நியாயமான காரணங்களால் ஆண் பெண்ணுக்குள் ஒற்றுமை இல்லை என்று ஏற்பட்டு விட்டால் பிரிந்திருக்கும் உரிமை வேண்டும் என்றே நாமும் விரும்புகின்றோம். இதனால் எத்தகைய விபரீதமும் விளைந்து விடாது. இதனால் விவாகம் கேவலமாகிக் குடும்பம் குலைந்து போகும் என்று அஞ்ச வேண்டியதும் இல்லை. நிபந்தனைகள் பலமாய்ப் போட்டால் விவாக ரத்துச் சட்டம் துஷ்பிரயோகம் செய்யப்படமாட்டாது என்று ஸ்ரீமதி ஜேஸு தாஸ் அம்மையார் சமாதானம் கூறுவது குறிப்பிடத் தக்கதாகும். ஆதலால் விவாக ரத்துச் சட்டமும் ஒரு பெண்ணுக்குமேல் கலியாணம் செய்யக்கூடாது என்ற சட்டமும் நமது நாட்டிலும் இயற்றப்பட வேண்டும் என்பது எமது பேரவா.

தங்கட்குள்ள எல்லாக் குறைகளையும் நீக்கும் அருமருந்தாக விளங்கும் கல்வியை எல்லாப் பெண்மணிகளும் போற்றிப் படிக்க வேண்டும். இன்றேல் இன்று காணப்படும் பெண் சமூகத்தின் இழிநிலை இன்னும் நீண்ட காலத்திற்கு நீடித்திருக்கும். இக் காலத்தில் பெண் கல்வி விஷயத்தில் சிறிது சிரத்தை காட்டப்படுகிறதாயினும் பெண் மக்கட்குரிய—தகுதியான கல்வி முறை இல்லை என்றுதான் கூற வேண்டும். ஆடவர்களை வேலையில்லாத் திண்டாட்டத்தில் அலக்கழிக்க வைக்கும் கல்வி முறையே பெண்கட்கும் அளிக்கப்படுகிறது. பெண்கட்குக் குடும்ப நிர்வாகக் கல்வியே மிகமிக முக்கியம். சமையல், சுகாதாரம், குடும்ப வைத்தியம், சிசு சம்ரக்ஷணை, வீட்டை அழகாக வைத்துக் கொள்ளும் முறை, குடிசைக் கைத் தொழில், தேகப் பயிற்சி முதலியவை பெண் கல்வியின் இன்றியமையாத அம்சங்களாக இருக்க வேண்டும். முற்காலத்தில் நமது நாட்டில் பல நல்லிசைப்புலமை மெல்லியார் வாழ்ந்ததையும் வீரப் பெண்மணிகள் வாழ்ந்ததையும் நூல்கள் வாயிலாக அறிகின்றோம். அத்தகைய நாரீமணிகளின் மரபில் வந்த நமது பெண்கள் இப்பொழுது எந் நிலையில் இருக்கின்றனர்? நேயர்களே! சற்றே சிந்தித்துப் பாருங்கள். பெண் ஜன்மமோ புண் ஜன்மமோ என்று மகளிர் கண்ணீர் சோரும் நிலையில் காலங் கழித்து வருகின்றனர். பெண் பிறவி பாவப் பிறவி என்ற எண்ணம் இன்னும் சிலரை விட்டகலவில்லை.

பெண்களும் மக்கள் கூட்டத்தினரே. அவர்கட்கும் உயிர் உண்டு. உணர்வு உண்டு. அறிவு உண்டு என்பதை உன்னி ஒவ்வொருவரும் அவர்களுடைய நலத்தில் கருத்தைச் செலுத்த வேண்டும். அரசியல் மாறுதல் ஏற்படப்போகும் இத்தருணத்தில் பெண்மணிகள் தங்கள் உரிமைகளை ஜாக்கிரதையுடன் நிலைநாட்டிக் கொள்ளவேண்டும். ஆண் பெண் அடங்கலும்—எல்லாருக்கும் ஆரம்ப கட்டாயக் கல்வி இன்றியமையாதது என்பதே எமது விருப்பமாயினும் குறைந்த பக்ஷம் பெண்கள் தாழ்த்தப்பட்டவர்கள் முதலியவர்கட்கேனும் தற்காலம் கட்டாய ஆரம்பக்கல்வி முறை அவசியமாகும். எனவே தமிழ்நாட்டிலிருக்கும் ஜில்லா போர்டு முதலிய ஸ்தல ஸ்தாபனங்கள் கட்டாய ஆரம்பக்கல்விச் சட்டத்தை இயற்றிவைக்க வேண்டும் என்று தமிழ்நாட்டுப் பெண்கள் மகாநாட்டார் செய்துள்ள தீர்மானம் பெரிதும் போற்றத்தக்க தொன்றாகும். உள்நாட்டுக் கைத்தொழில்களை ஆதரிக்குமாறு பொதுஜனங்களைக் கேட்டுக் கொள்ளுவதாகச் செய்யப்பட்ட தீர்மானத்தை யாம் பெரிதும் பாராட்டுகின்றோம். பெண்மணிகள் சுதேசிப்பொருள்களைத் தவிர வேறு வாங்குவதில்லை என்று தீர்மானம் செய்து கொண்டால் நமது நாட்டின் செல்வத்தில் பெரும்பகுதி அந்நியநாடுகட்குப் போகாது என்பது உறுதி. பெண்கள் உள்நாட்டுக் கைத்தொழில்களை ஆதரிப்பதால் நமது நாட்டு வறுமையும் ஓரளவு நீங்கி விடும்.

ஏழைகட்கும் அநாதைகட்கும் சம்ரக்ஷணாலயம் ஸ்தாபிக்க வேண்டும் என்று பொதுஜனங்களை வேண்டுவதாக ஒரு தீர்மானம்நிறைவேற்றப்பட்டிருப்பது எல்லாரும் கவனிக்கத் தக்கதாகும். நாகரிகமுள்ள மேனாடுகளில் இத்தகைய ஸ்தாபனங்கள் பெரும்பயன் விளைத்து வருகின்றன. நமது நாட்டில் பிச்சைக்காரர் தொல்லை சகிக்கக்கூடாததாயிருக்கிறது. வேலை செய்யத் திறமை வாய்ந்தவர்களுங்கூடப் பிச்சை எடுக்குந் தொழிலில் தலைப்பட்டுவிடுகின்றனர். போலிச் சாமியார்களின் கூட்டமும் நாளுக்கு நாள் பெருகி வருகிறது. இவற்றை யெல்லாம் ஒழிக்க சம்ரக்ஷணாலயங்கள் பெரிதும் பயன்படுவனவாகும்.

கிராமங்களில் பயிற்சிபெற்ற மருத்துவச்சிகளின் உதவி கிடைப்பதில்லை. அதனால் பிரசவ கால மரணங்களும், சிசு மரணங்களும் மிகுதியாக நடைபெறுகின்றன. கிராமத்திற்கு ஒரு மருத்துவச்சி இருக்க வேண்டியது அவசியம். ஆகையால் மருத்துவச்சிகளின் பயிற்சிசாலைகள் மாகாணம் முழுவதும் ஆங்காங்கு நிறுவப்பட வேண்டும் என்ற தீர்மானத்தை அரசாங்கத்தார் நன்கு கவனித்துத் தக்க ஏற்பாடு செய்ய வேண்டும் என்று விரும்புகின்றோம். தமிழ் நாட்டுப் பெண்கள் மகாநாட்டார் பொதுவாக நாட்டிற்கும்—சிறப்பாகத் தங்கள் சமூகத்திற்குமுரிய முக்கியமான தீர்மானங்களை நிறைவேற்றிப் பெண்ணுலகைத் தட்டி எழும்பியதற்கு எமது நன்றியையும் ஆதரவையும் தெரிவித்துக் கொள்ளுகின்றோம். ஓம் தத் ஸத்.




# சடையன் புகழ்மாலை.

(ரா. பி. சேதுப் பிள்ளை, பி.ஏ., பி. எல்.)

நடுநாட்டிலமைந்த திருவெண்ணெய் என்னும் நன்னகரில் வறுமையின் பகைஞராய ஒரு வள்ளல் வாழ்ந்து வந்தார். அப்பெருந்தகையார் வேளாண்மைப் பணியாற்றி விழுமிய செல்வம் பெற்று விளங்கினார். அறத்தாற்றில் வந்த அரும்பொருளை அறிஞர்க்கும் வறிஞர்க்கும் அகனமர்ந்து வழங்கினார்.

அருந்தமிழ்க் கவிஞராய கம்பரை இவ்வள்ளல் ஆதரித்துப் போற்றிய பெருமையை அறியாதார் இந்நாட்டில் எவருமில்லை. தாளுண்ட நீரைத் தலையாலே தரும் தெங்கின் தகைமை வாய்ந்த கம்பர், தம்மை ஆதரித்த அண்ணலது பெருமையை என்றும் அழியாத வண்ணம் இவ்வுலகில் நிலை நிறுத்திப் போந்தார். நன்றி மறவாத நல்லியற் கவிஞர், வரையாது வழங்கிய வள்ளலின் பெருமையை வளமார்ந்த கவிகளில் அமைத்து வழுத்தும் முறை, அவரது செம்மைசான்ற சீலத்தை இனிதுணர்த்துகின்றது.

வறுமைக்கடலில் வீழ்ந்து வருந்திய மக்களை வெண்ணெயில் வாழ்ந்த வள்ளலார் ஆதரித்துக்காத்த அருமை உலகம் உள்ளளவும் அழியாததாகும். பொருளென்னும் புணையின்றி, வாழ்க்கைக்கடலில் வீழ்ந்து தயங்கிய வறிஞர்க்கு இவ்வள்ளல் ஓர் பெருங்கலமாய் அமைந்தார்.

"மஞ்சினில் திகழ்தரு மலையை மாக்குரங்கு
எஞ்சுறக் கடிதெடுத் தெறியவே நளன்
விஞ்சையில் தாங்கினன்; சடையன் வெண்ணெயில்
தஞ்சமென் றோர்களைத் தாங்கும் தன்மைபோல்."

என்று வள்ளலின் பெருமையைக் கம்பர் வாயாரப் பகழ்ந்தார். தென்தமிழ் நாட்டிற்கும் இலங்கைக்கும் இடையே நின்ற நெடுங்கடலில் அணையமைக்கப் போந்த வானரவீரர், பெரியமலைகளைப் பெயர்த்துக் கடலுள் வீசி யெறிந்தார்கள். இங்ஙனம் பல திசைகளினின்றும் வானரங்கள் வீசி யெறிந்த மலைகளை, நளன் என்னும் வானரத்தச்சன் வரிசையாக அடுக்கி அணையில் அமைத்தான். மாண்புற நிமிர்ந்துநின்ற மலைகள் உவர்க்கடலில் வீழ்ந்து உலையாவண்ணம், கலையின் வன்மையால் ஆதரித்து அணையில் அமைத்துக்

காத்த நளனது தன்மை, தஞ்சமென் றடைந்தோரைத் தாங்கும் தகைமை வாய்ந்த வெண்ணெயூர்ச் சடையனது வண்மையை நிகர்த்ததென்று கவி கூறும் அழகு சால இனியதாகும். நிலத்தில் அமைந்த மலைகளைப் பெயர்த் தசைத்துக் கருங்கடலில் வீசிய வானரம், மக்களாய்ப் பிறந்தோரை அலைத் துக் குலைத்து, துயர்க்கடலில் வீழ்த்தும் வறுமையை நிகர்த்தது. வானரத் தின் கொடுமையால் நிலைகுலைந்து நீரில் வீழ்ந்தழிய வந்த மலைகள், அங்கு நளன் என்னும் நல்லானைக்கண்டு அவனைச் சரண் அடைந்த தன்மை, வறு மையின் கொடுமையால் துயர்க்கடலில் வீழ்ந்து அழியவந்த வறிஞர், வெண் ணெய் நல்லூர் வள்ளலாரைத் தஞ்ச மடைந்த தன்மையை ஒத்திருந்தது. அஞ்சிவந்த மலைகளுக்கு அபயம் அளித்து ஆதரித்து அணையில் அமைத்த நளன், வருந்தி வந்து தஞ்சமடைந்த வறிஞரை ஆதரித்துத் தாங்கிய வள் ளலை ஒத்தான் என்று கவிஞர் கூறும் முறை கற்போர் கருத்தைக் கவர்வதாகும்.

இத்தகைய வள்ளலைக்கண்ட வறுமைநோய், கதிரவனைக்கண்ட காரிருள் போல் கடுகி ஓடிற்று. வறுமையால் நலிந்த வடமொழிவாணரும், தென் தமிழ் அறிஞரும், பாசம் கலந்த பசிநோயினின்றும் விடுபட்டுப் பண்புற்ற பான்மையைக் கம்பர் இனிய மொழிகளால் எழுதிப் போந்தார்.

"வாசங்கலந்த மறைநாளநூலின் வகையென்பதென்னை மழையென்று
ஆசங்கைகொண்ட கொடைமீளி யண்ணல் சரராமன் வெண்ணெய் [அணுகும்
தேசங்கலந்த மறைவாணர் செஞ்சொல் அறிவாளர் என்றிம் முதலோர்
பாசங்கலந்த பசிபோ லகன்ற பதகன் துரந்த உரகம்."

என்று கம்பர் அருளிய கவியின் நயம் கருதத் தக்கதாகும். இலங்கையில் நிகழ்ந்த பெரும் போரில் மேகநாதன் என்னும் வீரன், வானரசேனையை நாக பாசத்தாற் பிணித்தான்; வீரன் விடுத்த பாசத்தின் வெம்மைக்கு ஆற்றாது வானரசேனை வருந்தித் தளர்ந்தது. இவ்வாறு இறுகப் பிணித்த நாகபாசம் கலுழனைக் கண்டபோது வலியிழந்து இற்று ஒழிந்த தன்மையைக் கம்பர் ஓர் உவமையின் வாயிலாக உணர்த்திப் போந்தார். நூலறி புலவரைப்பற்றிய பசி நோய், வெண்ணெயூர் வள்ளலாரைக் கண்டபோது அற்றொழிந்தாற் போன்று, வானரசேனையைப் பிணித்த நாகபாசம், கலுழனைக் கண்டபோது இற்றொழிந்ததென்று கம்பர் கூறும் உவமை கனிந்த இன்பம் பயப்பதாகும். ஆகவே இருமொழிப் புலவரையும் நல்விருந்தா யேற்று ஆதரித்த வள்ளலின் பெருமை இக்கவியில் இனிது விளங்கக் காணலாம்.

வறுமையின் பகைஞராய் விளங்கிய இவ்வள்ளலது புகழ், எத்திசையும் தவழ்ந்து பரவிற்று.

"வண்ணமாலை கைபரப்பி உலகை வளைந்த இருளெல்லாம்
உண்ண எண்ணித் தண்மதியத்து உதயத்தெழுந்த நிலாக்கற்றை
விண்ணும் மண்ணும் திசையனைத்தும் விழுங்கிக்கொண்ட விரிநன்னீர்ப்
பண்ணை வெண்ணெய்ச் சடையன் தன்புகழ்போ லெங்கும் [பரந்துளவால்."

என்று பாரெங்கும் பரந்துநின்ற வள்ளலின் புகழைக் கவிஞர் பண்புற எழு திப் போந்தார்.

செம்மைசான்ற கரங்களோடு இம்மண்ணுலகில் தோன்றிய வள்ளல் போல், தண்கதிர்த் திங்கள் கால் வீசி எழுந்தது. உலகில் நின்ற வறுமையை நீக்கி எங்கும் புகழ்விரித்த வள்ளலேபோல், உலகில் நின்ற இருளை விழுங்கித் திங்கள் எங்கும் ஒளிபரப்பியது. வறுமை வாய்ப்பட்டு வருந்திய உலகம் வள்ளலது இன்முகங்கண்டு மலர்ந்தாற் போன்று, இருளில் இடருற்ற மக்கள் மதியின் முகங்கண்டு மகிழ்ந்தார்கள். வள்ளலது புகழ் வர வர விரிந்து வையமெலாம் பரவிய பான்மைபோல், மதியின் ஒளி வர வர வளர்ந்து உலகெங்கும் பரவிற்று. சாதியென்றும் குலமென்றும் கருதாது வறியவர்க்கெல்லாம் வரையாது பொருள் வழங்கிய வள்ளல்போல், நாடென்றும் காடென்றும் நோக்காது கடலென்றும் திடலென்றும் கருதாது, திங்கள் எங்கும் ஒளி வீசியது என்று கம்பர் கூறும்முறை சால அழகியதாகும்.

இவ்வாறு ஓங்குபுகழால் உலகளந்த வள்ளல், சான்றாண்மை என்னும் சீலத்தில் தலைசிறந்து விளங்கினார். சான்றோர் தன்மை கூறப்போந்த தமிழ் மறை ஆசிரியர்,

"ஊழி பெயரினும் தாம் பெயரார் சான்றாண்மைக்கு
ஆழி யெனப் படுவார்."

என்று அமைந்த மொழிகளால் அருளிப் போந்தார். ஊழி பெயரினும் பெயராத உறுதிமொழி வேளாண் மாந்தர்க்குரிய தென்று பழந் தமிழ்ப் புலவர் போற்றிப் புகழ்ந்துள்ளார்கள். இத்தகைய சொல்லுறுதி வாய்ந்த சடையப் பாது சீலத்தை,

"விண்ணவர் போயபின்றை விரிந்த பூ மழையினாலே
தண்ணெனும் கானநீங்கித் தாங்கருந் தவத்தின்மிக்கோன்
மண்ணவர் வறுமைநோய்க்கு மருந்தன சடையன் வெண்ணெய்
அண்ணல்தன் சொல்லேயன்ன படைக்கல மருளினானே."

என்னும் அருங் கவியின் வாயிலாகக் கம்பர் அறிவித்துப் போந்தார். வெண்ணெய் நல்லூர் வள்ளலது வாய்ச் சொல், சிறிதும் வழுவாது கருதிய பயனைத் தருதல் போன்று, குறி விலகாது கொற்றம் தரும் படைக்கலங்களை முனிவர் இராமனுக்கு அளித்தா ரென்று கம்பர் கூறும் உவமை வள்ளலது சான்றாண்மையை இனிது விளக்குகின்றது. முனிவர் அளித்த படைக்கலம், உலகில் தீமையை ஒழித்து நன்மையை நிறுத்திய தன்மைபோல், வள்ளலின் வாயுரை, துன்பத்தை யகற்றி இன்பத்தை நிலைபெறச் செய்ததென்னும் பொருள் குறிப்பாகக் கிடைப்பதாகும்.

இவ்வாறு சடையனது பெருமையைப் போற்றிப் புகழ்ந்த கம்பர் தலையாய உதவி செய்த அத்தக்காரைத் தமது நூலில் வைத்தற்குரிய இடந் தெரிந்து வைத்துள்ளார், என்று கூறுதல் மிகையாகாது. இராம காதையின் சென்னியாய்த் திகழும், முடிசூட்டு விழாவில் மதித்தற்கரிய மாணிக்கமாய வள்ளலது பெருமை மலையிலமைந்த ஒளிபோல் மாண்புற விளங்குகின்றது.

ஆதி மன்னனது வாய்மை காத்து, அன்னையின் ஆணையை மேற்கொண்டு பதினாலாண்டு படர் கானகத் தலைந்து, அறநெறி துறந்த அரக்கரை வென்று,

மீண்டும் அயோத்திமா நகரடைந்த அஞ்சனவண்ணனாய இராமனுக்குத் திருமுடிசூட்டிய திருந்திய விழாவில்,

"அரியணை அநுமன் தாங்க அங்கதன் உடைவாளேந்தப்
பரதன் வெண்குடை கவிக்க இருவரும் கவரிவீச
விரைசெறி குழலியோங்க வெண்ணெய்யூர்ச் சடையன் தங்கள்
மரபுளோர் கொடுக்க வாங்கி வசிட்டனே புனைந்தான் மௌலி."

என்று கவிஞர் கூறும்முறை கருதி மகிழத் தக்கதாகும். இருமையும் தரும் பெருமானாய இராமன் திருமுடி தரிக்கும் இனிய காட்சியைக் கண்டு களிக்கும் வண்ணம் விண்ணவரும் மண்ணவரும் மாளிகையில் விரைந்து நிறைந்தார்கள். மாநிலங் காக்கும் மன்னரும், அறநெறிபோற்றும் ஆன்றோரும், முற்றத் துறந்த முனிவரும், அறிவிற் சிறந்த அமைச்சரும் இமையாது காத்திருந்த அப்பெருஞ் சபையில் அரியாசனத்தில் இனிதமர்ந்த இராமனது சென்னியில் அமைதற்குரிய செம்மைசான்ற திருமுடியை அங்கையாலெடுத்து அருந்தவ முனிவன் கையில் கொடுக்கும் பெருமை வெண்ணெய் நல்லூர் வள்ளலார்க்கு வாய்த்தது.

அரியாசனத்தை அநுமன் தாங்கி நிற்க, அங்கதன் உடை வாளேந்தி அருகே நிற்க, பரதன் வெண்குடை கவிக்க, இருதம்பியரும் இருமருங்கும் கவரி வீச, அருந்தவரும், அந்தணரும், அரசரும், அரிக்குல வீரரும் அணியணியாய் அமர்ந்திருக்க, வெண்ணெய்நல்லூர் வள்ளலது மரபில் உதித்த பெருந்தகையார் மணிமுடியை எடுத்து மாதவன் கையில் கொடுக்க, மாதவன் அம்முடியை மன்னனது சென்னியில் அணிந்தான். இதுவே கம்பர் நம் கண்ணெதிரே எழுதிக்காட்டும் உயிர் ஓவியமாகும். இவ் வோவியத்தின் அமைதியை ஆராய்வாம். அரக்கரொடு நிகழ்ந்த அரும்போரில் வீரர் இருவரையும் தாங்கிக் காற்றினும் கடிய வேகத்தோடு அமர்புரிந்த அநுமன் இராமனது திருவடியைத் தாங்கி நிற்கும் பெருமை பெற்றான். வானர நாட்டை அரசுபுரிந்த வாலியின் கண்ணடையும்போது, கை வாளளித்துக் கையடையாக ஏற்ற அங்கதன் உடைவாளை ஏந்தி நிற்கும் உரிமை பெற்றான். மன்னன் காடுறைந்த பதினாலாண்டும் அவன் பாதுகையால் உலகாண்ட நீதியின் நிலையமாய பரதன், வெண்குடை கவிக்கும் விழுப்பம் பெற்றான். ஐயன் பணியே தமக்கு அமைந்த பணியாகக்கொண்ட இலக்குவனும் இளையவனும் இருமருங்கும் கவரி வீசும் பேறு பெற்றார். கோசலநாட்டு மன்னர்க் கெல்லாம் குலகுருவாய் அமைந்த முனிவர், இரவிகுலப் பெருமையைத் தன் பெருமையாக்கிய இராமனுக்கு திருமுடி தரிக்கும் தகைமை பெற்றார். வேந்தன், செழித்தோங்குதற்குரிய வேளாண்மைத் தொழிலியற்றும் விழுமிய குடிகளின் சார்பாக, குணக்குன்றாய் விளங்கிய வெண்ணெய் நல்லூர் வள்ளலார், அம்மணிமுடியை எடுத்துதவும் மாட்சி பெற்றார். மேழி பிடிக்கும் கையே ஆழிவேந்தரை ஆக்கும் கை என்பது அரசியலின் அடிப்படையான உண்மை யன்றோ?

# ஜாதியும் வருணபேதமும்.

(பூ. ஸ்ரீநிவாசன்.)

பண்டைக்காலத்தில், தமிழ் நாட்டில், ஜாதிப் பிரிவினைகள் தற்காலம் இருப்பதுபோல் இருந்ததாகத் தெரியவில்லை. 'ஜாதி' என்னும் பதமும் அதே பொருளில் வழங்கிவருகிற 'வர்ணம்' என்னும் பதமும் தமிழ் மொழிகளாக இல்லாமையும் இதற்கோர் சான்றாகும். ஆனால், அந்தணர் அரசர் வணிகர் வேளாளர் என்னும் பகுப்புக்களின் பெயர்கள் பண்டைய நூல்களில் காணப்படுகின்றன. எனினும், இவை தொழில் பேதம் பற்றி யுண்டான பிரிவினைகள் என்பது ஆன்றோர் அபிப்பிராயமாகும். தற்போது வழங்குகின்ற பிராம்மண க்ஷத்திரிய வைசிய சூத்திரப் பிரிவினைகள் ஆரியரால் உண்டுபண்ணப்பட்டவை என்ப. 'புதிய வெள்ளம் வந்து பழைய வெள்ளத்தை அழித்தது' என்னும் பழமொழியின்படி, ஆரியப் பிரிவினைகள் தோன்றிய பின் பழைய பாகுபாடுகள் மறைந்தன. இப்புதியது எப்போது வந்தது எப்படிவந்தது என்பது பற்றிய ஆராய்ச்சிகள் தற்கால நிலையை நோக்குமிடத்து பயனற்றவை. எப்பொழுதோ எப்படியோ வந்து பின்னிப் பிணைந்துகொண்டுவிட்டன. இருப்பினும் குறையில்லை. அப்பாகுபாடுகளும் தொழில் பற்றி எழுந்தனவே யென்பது ஆராய்ச்சியால் புலனாகின்றது. பிராஹ்மணர் க்ஷத்திரியர் வைசியர்—இவை மூன்றும் அந்தணர் அரசர் வணிகர் என்பவற்றோடொப்பானவை. சூத்திரர் என்பதற்கு மனுதர்ம சாத்திரம் முதலியவற்றில் இழிவான பொருள் கூறப்பட்டிருப்பதாகச் சொல்லுகின்றனர். அது எவ்வளவு உண்மை யென்பதை யாமறியோம். நிற்க.

இப்பாகுபாடுகள் மனித சமூகத்தில் இயல்பாகவே உண்டானவைவாம். இது எந்நாட்டிலும் உள்ளதே யன்றி நம் நாட்டில் மாத்திர முள்ளதன்று. தொழில் என்று ஒன்று எப்பொழுது ஏற்பட்டதோ அப்பொழுதே இப்பிரிவினையும் ஏற்படவே செய்யும். ஏற்படாமலிருக்க முடியாது. மட்பாண்டம் செய்வோரை மண்வினைஞரென்றும், தச்சுவேலை செய்வோரைத் தச்சரென்றும், கணக்கு எழுதுவோரைக் கணக்கரென்றும், ஆடை வெளுப்போரை வண்ணாரென்றும், மயிர்த் தொழில் செய்வோரை மயிர் வினைஞரொன்றும், வாணிபம் செய்வோரை வணிகரென்றும் அழைக்கப்படாமலிருக்க முடியுமோ? மேற்காட்டிய பெயர்களெல்லாம் தொழில் பற்றி யுண்டானவையோ அன்றோ பாருங்கள்.

ஆகவே, தொழில் பேதத்தினால் வகுப்புப் போதங்களுண்டாயினவே யன்றிப் பிறவியினாலே உண்டாயின வென்பது அறிவுடையோ ரெவர்க்கும் அங்கீகாரமான விஷய மன்று. பிறப்பால் யாவரும் சமமானவர்களே.

"பிறப்பொக்கும் எல்லா வுயிர்க்கும், சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யால்."

என்று பொதுமறை போதிப்பதும் இதுபற்றியே யாம்.

இந்தத் தொழில்களும் அவரவர்களுடைய குணத்திற் கேற்பவே அமையும். ஒருவனுடைய குணம் இயல்பாகவே சாந்தமுடையதா யிருக்கும். மற்றொருவனுடைய குணம் சண்டையில் விருப்புடையதாயிருக்கும். மற்றொருவனுடைய குணம் பெரியோர்களிடத்தில் பக்தியும் விசுவாசமு முடையதா யிருக்கும். வேறொருவனுடைய குணம் கைத்தொழிலை விரும்பும். எல்லோருடைய குணமும் ஒரே தன்மையா யிருப்பதில்லை. ஆகவே, அவரவர்கள் தத்தம் குணத்திற் கேற்றவாறே தொழில்களை கைக்கொள்ளுதல் இயல்பேயன்றோ? இதுவே, வகுப்புப் பிரிவினைகளுக்குக் காரணமா யிருக்கிறது.

(1) சாந்தம், பக்தி, நன்னடக்கை, இரக்கம், கருணை, பற்றின்மை முதலிய குணங்களை யுடையோர் ஒரு சாரார். (2) அஞ்சாமை, க்ஷாத்திரியம், தேசத்தைப் பாதுகாக்க வேண்டியவகையில், முயற்சி, ஆண்மை முதலிய குணங்களை யுடையோர் மற்றொரு சாரார். (3) பசுக்காத்தல், ஊரார்க்குத் தேவையான பண்டங்களை அவை கிடைக்குமிடங்களிலிருந்து கைப்பணத்தை யனுப்பி வரவழைத்து சொற்ப லாபத்திற்குக் கொடுத்தல், தானியம் விளைவித்தல் முதலியவற்றில் விருப்புடைய குணத்தினர் வேறொரு வகுப்பினர். (4) சாதுக்களுக்குத் தொண்டு பூண்டு அவர் சொல்வழி நடந்து நன்மையை யடைய வேண்டும் என்னும் எண்ணத்துட னொழுகுவோர் பிறிதொரு வகுப்பினர்.

இந்த நான்கு பகுப்புக்களே பிராம்மண க்ஷத்ரிய வைசிய சூத்திர பகுப்புக்கள். இதுவே பகவத்கீதையின் கருத்து.

### 1. பிராஹ்மணத்வம்.

ஸமம் (ஐம்பொறி யடக்கம்), தமம் (மனோநிக்ரகம்), தபஸ் (துன்பத்தை யடக்குதல்), ஸௌசம் (தேக சுத்தி), சாந்தி (பொறுமை), ஆர்ஜவம் (நேர்மை), ஞானம் (ஆன்ம வித்தை), விஞ்ஞானம் (பிரகிருதியும் அதன் காரியங்களும் எவ்வாறு ஆன்மாவோடு சம்பந்தப்பட்டிருக்கின்றன வென்ற ஞானம்), ஆஸ்திக்யம் என்ற பிராஹ்ம கர்மம் (ஆஸ்திகபுத்தி என்ற பிரஹ்மத்தை யடைவதற்காகப் பகவானால் அருளப்பட்ட குணங்கள்.)

### 2. க்ஷத்ரியத்வம்

சௌரியம்; தேஜஸ், தைரியம், சாமர்த்யம், போரில் அஞ்சாமை, ஈகை, ஈஸ்வரபாவம் என்ற க்ஷாத்ரகர்மம்.

### (3) வைஸ்யத்வம்

கிருஷி, கோரக்ஷணை, வாணிபம் என்ற வைஸ்ய கர்மம்.

### (4) சூத்ரத்வம்

பரிசர்யாத்மக கர்மம் (ஏவல் செய்ய விரும்புவோன்.)

இப்படி குணங்களுக்குத் தக்கபடி கர்மங்கள் அமைகின்றன. கர்மங்களுக்குத் தக்கபடி பகுப்புக்கள் ஏற்படுகின்றன. இந்த குணங்களாலும் கர்மங்களாலும் உண்டானவைகளே வருணபேதங்கள். நியதி பெற்ற சுயகுணங்களாகிய நற்குணங்களைப் பெற்றவர் மேலான நிலையை யடைந்த ஜாதிகளாதலால் போற்றத்தக்கவர்களாவர் என்ற பொருளில் வர்ணத்தார் என்று அழைக்கப்படுவர். (வரண்=போற்றுதல்.)

வர்ணம் என்பதற்கு நிறம் எனப் பொருள் கொள்ளினும் அமையும்; எவ்வாறெனின்: குணங்களுக்கு நிறங்கள் கற்பிக்கப்பட்டிருத்தலின்.

இந்த குணங்கள் பிரகிருதியினுடையவை; பிரகிருதியினின்றும் தோன்றியவை. பிர—கிரு—தி என்பது சத்துவம் ரஜசு தமசு என்னும் மூன்று குணங்களுடன் கூடியது எனப் பொருள்படும் என்பர் பெரியோர். இந்த பிரகிருதியில் பரமேசுவரனது சித்சக்தி சென்று, பிரகிருதியின் மிஸ்ர குணத்தை மூன்றுகுணங்களாகப் பிரித்து சிருஷ்டிக்கிரமத்தைத் தொடங்கிற்று. பிறவியை யடையும் ஜீவாத்மா தன் பூர்வ கர்மத்திற் கேற்றவாறு இம் மூவகைக் குணங்களு ளேதேனுமொன்றைக் கர்ப்பத்திலிருக்கும் பொழுதே பெற்றுப் பிறக்கின்றது. ஆகையால் இக்குணங்கள் சுபாவ ஜன்யங்கள் எனப்படுகின்றன.

இக்கருத்தையே பகவான் கீதையில், "குணவிபாகத்தாலும் கர்மவிபாகத்தாலும் சதுர்வர்ணம் என்னால் சிருஷ்டிக்கப்பட்டன" (4—13), என்றும்,

பிராஹ்மண க்ஷத்ரிய வைஸ்ய சூத்திரர்களின் கர்மங்கள் சுபாவ ஜன்ய குணங்களினால் வகுக்கப்பட்டன (18—41) என்றும் கூறியருளினர்.

எனவே, கர்மங்கள் ஜடமாகலின், பகவான் அவற்றை ஜீவர்களின் கர்மங்களுக்கேற்றவாறு முக்குணங்களின் வாயிலாகக் கர்மானுபவத்தை யடையும்பொருட்டு நான்கு வகுப்பினராக (வருணத்தினராக) சிருஷ்டித்தார். அதாவது, பகவானால் படைக்கப்பட்ட சீவர்கள் தத்தம் கர்மத்திற்கேற்றவாறு முக்குண வயத்தராய் நான்கு வருணத்தினராய்ப் பிறக்கின்றனர் என்பது தெளிவாகின்றது.

முக்குணங்களால் நான்கு வருணங்க ளெப்படி யுண்டாகின்றனவெனின்:—

சத்துவ குணமும் பிராஹ்ம தருமமும் சேர்ந்தது ஒரு வருணம். (நல்லொழுக்கம், ஆத்மானாத்த விசாரம், குருவினிடத்தும் சுருதியினிடத்தும் தெய்வத்தினிடத்தும் விசுவாசம் முதலியவை பிராஹ்ம தருமங்களாம்.. இவை பிராஹ்மணத்துவம்.

ரஜஸின் சத்துவ குணமும் க்ஷாத்ர தருமமும் சேர்ந்தது ஒரு வருணம். இது க்ஷத்திரியத்துவம்.

ரஜஸின் தமோ குணமும் பாலன தருமமும் சேர்ந்தது ஒரு வருணம் இது வைஸ்யத்துவம்.

தமோகுணத்தின் ரஜாம்சமும் புண்ணிய புருஷ சேவை என்ற தருமமும் சேர்ந்தது ஒரு வருணம். இது சூத்திரத்துவம்.

இவ்வாறு முக்குணங்களினின்றும் நான்கு வருணங்களுண்டாயின.

ஜீவர்கள் தத்தம் கர்மாநுசாரமாக இயற்கையாகவே—பிறவியிலேயே—பெற்ற குணத்திற்குத்தக்க கர்மங்களில் நிலையாக நின்று ஒழுகி வந்தால், நாளாவட்டத்தில் குணங்களையும் அவற்றால் உண்டாம் சுகதுக்கங்களையும் அறிந்து, கிரமங்கிரமமாக அவித்தையை யகற்றி உய்வார்கள். இதற்காகவே பகவான் குணங்களுக்கேற்றவாறு கர்மங்களையும் சிருஷ்டித்தார்.

இக்கர்மங்கள் பிரவிருத்தி மார்க்கங்களாம். பிரவிருத்திமார்க்கத்தில் சுகபுத்தியில்லாதவர்களாய் நிவிருத்தி மார்க்கத்தைக் கொண்டவர்களும் பலரிருக்கின்றனர். அவர்கள் ஆர்த்தாக்கள், ஜிஞ்ஞாசுக்கள், அர்த்தார்த்திகள், ஞானிகள் என்னப்படுவர் என்று பகவத்கீதை பகர்கின்றது.

இதுகாறும் செய்த சிறு ஆராய்ச்சியால் அறிந்துகொள்ளவேண்டிய முக்

கிய விஷயங்களாவன:—மாந்தர் தத்தம் பூர்வ கர்மங்களுக் கேற்றவாறு, பகவானால் சிருஷ்டிக்கப்பட்ட முக்குணங்களு ளேதேனு மொன்றைப் பிரதானமாகக்கொண்டு பிறக்கின்றனர்; அக்குணங்களுக் கேற்ற கர்மங்களைக் கைப்பற்றித் தரும வழியி லொழுகிக் கடைத்தேறுவதற்காகப் பகவான் கர்மங்களைச் சிருஷ்டித்தார்; சுய கர்மங்களை அறநெறி வழாது அனுஷ்டித்தல் மேன்மையடைதற்குக் காரணமா யிருத்தலின் அவை போற்றத்தக்கனவாம். அதாவது வர்ணமாம். அந்த நிலையிலுள்ளவர்கள் வர்ணத்தார் எனப்படுவார். ஆகவே வருணம் என்பது குணத்தைப்பற்றி யுண்டாயிற்று. இதுவே பகவத் சிருஷ்டியின் உண்மைப் பொருள் என்பனவும் பிறவுமாம். இனி, இந்த நான்கு வருணத்துள் பிராஹ்மணத்துவம் சத்துவ குணத்தா லாயினமையின் சிறந்தது என்பதும், ரஜோ குணத்தின் சத்துவாமிசமாகிய க்ஷத்ரியத்துவம் அதனினும் தாழ்ந்த தென்றும், ரஜோ குணத்தின் தமாம்ஸ மாகலின் வைஸ்யத்துவம் அதனினும் தாழ்ந்ததென்றும், தமோ குணத்தின் ரஜாம்சமாகலின் சூத்திரத்துவம் அதனினும் தாழ்ந்ததென்றும் விளங்குகின்றது.

இந்த நான்கு வருணங்களைத் தவிர ஐந்தாவது வருணம் இல்லை. ஆகவே, பஞ்சமர் என்னப்படுவோராக ஓர் வருணத்தார் இருக்கின்றன ரென்பதற்கு நூல்களில் ஆதாரமே யில்லை.

பகவான் அருளிய இவ்வருணங்களென்னும் பிறவிக்குணங்கள் சூட்சும சரீரத்தின் ஒரு பாகமாகிய அந்தக்கரணத்திற்குரியனவாகும். ஜீவாத்மாவுக்கே யுரியது. ஸ்தூல தேகத்திற்கும் இதற்கும் சிறிதும் சம்பந்தமேயில்லை. ஒரு குடும்பத்தைச் சேர்ந்தவர்களுள் தலைவன் ஒரு குணத்தை யுடையவனா யிருப்பான். அதாவது பிராஹ்ம குணத்தை யுடையவனா யிருப்பான். அவன் தம்பி க்ஷாத்ரகுண முடையவனாயிருப்பான். அவன் மகன் சூத்ரகுண முடையவனாயிருப்பான்; ஆகவே, பிராஹ்மகுணத்தை யுடையவனுடைய சூத்ர குணத்தையுடைய மகனும் க்ஷாத்ர குணத்தையுடைய தம்பியும் பிராஹ்மணராகார். ஆவதற்கும் நியாயமில்லை. சாஸ்திரமும் இதற்குச் சம்மதப்படாது. அப்படியே சூத்திரகுணத்தை யுடையவனுடைய பிள்ளை பிராஹ்ம குணத்தை யுடையவனாயிருந்தால் அவன் பிராஹ்மண வருணத்தானென்று சொல்லப்பட வேண்டுமென்பதே நூல்களின் துணிபு.

ஆனால், தந்தையை நோக்கித் தநயன் சந்ததியானென்று சொல்லப்படலாம். இவன் பிராஹ்மணனுடைய சந்ததியான், வம்சத்தான்; இவன் சூத்திரனுடைய சந்ததியான், வம்சத்தான் என்று சொல்வது நியாயமே யன்றி, பிராஹ்மண வருணத்தான் பிள்ளையாகிய சூத்திர வருணத்தானை பிராஹ்மண வருணத்தான் என்று கூறுதல் பொருந்தாது. இப்படி சூட்சும தேக தர்மங்களை ஸ்தூல தேக தர்மமாகக் கருதி, ஸ்தூல தேகத்தின் மேலேற்றி, ஸ்தூல தேக வர்ணங்கள் என்று கூறுவது அஞ்ஞானமாம்; வேதாகமங்களின் சூட்சும மார்த்தத்தை அறியாத (மூடத்) தன்மையாம். ஆகவே,

"குணத்தாலும் தொழிலாலும் இவன் பிராஹ்மணன், இவன் க்ஷத்ரியன் இவன் வைஸ்யன், இவன் சூத்ரன் என்பது மெய். ஸ்தூல தேகங்களைப்பற்றிச் சதுர்வர்ணம் உண்டென்பது பொய்." இதுவே பகவத்கீதையின் கருத்தாம். இனி,

"உண்மைப் பிராஹ்மணன் யார்?" என்னும் விஷயத்தை அடுத்த இதழில் ஆராய்வோம்.




# சசிவன்னன்.

(பண்டித. பூ. ஸ்ரீநிவாசன்.)

(201-ம் பக்கத் தொடர்ச்சி)

## மூவகை இலக்கணையின் முறைமை கூறல்.

சசி:—"ஒரு வாக்கியத்திலுள்ள இரண்டு பதங்கள் ஒன்றுபட்ட பொருளைப் பயவாமல் மாறுபட்ட பொருளைத் தருவதாகக் காணுமிடத்து, 'பெரியோர்கள் பேசிய அவ்வாக்கியம் பிழையல்ல. பொருள் படுத்தும் முறையில் தவறிருக்கின்றதென வுணர்ந்து, இலக்கணையால் (ஆகு பெயரால்) பொருள்கொள்ள வேண்டுமென்றும், அதனால் (இலக்கணையால் பொருள் கொள்வதால்) வாக்கியப்பொருள் நன்கு உணரப்படு" மென்றும் சுவாமிகள் சொல்லியதை யறிந்தேன். சுவாமி! "இலக்கணையின் விஷய மாக ஏதேனும் இன்னும் இயம்ப வேண்டியிருப்பின், அதனையும், அவ்விலக் கணையால் சீவேசுவரர்கள் ஒன்றென்றறிவதெப்படி யென்பதையும் திருவாய் மலர்ந்தருள வேண்டுகிறேன்."

மாநந்தி:—அறிவுள்ள மாணவனே! முற்கூறிய இலக்கணையைப் பெரி யோர்கள் (இலக்கண நூல் வல்லோர்) மூன்று வகையாக முறைப்படுத்தியிருக் கின்றனர். அவற்றை விளக்குகின்றேன் கேள். "விட்டலக்கணை-விடாதலக் கணை-விட்டுவிடாத லக்கணை" என இலக்கணை மூன்று வகைப்படும். இவை முறையே "ஜகல்லக்ஷணை-அஜகல்லக்ஷணை-ஜகதஜகல்லக்ஷணை (பாகத்தியாக லக்ஷணை)" என்றும் கூறப்படும். இனி, இவற்றை உதாரணங்களால் விளக் குவோம்.

## விட்டலக்கணை.

"சொல்லப்பட்ட பதத்தின் நேரான பொருள் எதுவோ, அதனை முழு வதும் விட்டு அதனோடு சம்பந்தமுடைய வேறு பொருளைக் கிரகிப்பது விட்ட லக்கணையாம். உதாரணமாக:—ஒருவன் "இடைச்சேரி எங்கிருக்கிறது?" எனக் கேட்டதற்கு, மற்றொருவன் "கங்கையிலிருக்கிறது இடைச்சேரி" என்கிறான். இவ்வாக்கியத்தில் கங்கை என்னும் பதத்தின் பொருள் நீர்ப் பெருக்கு—(வெள்ளம்) அதில் இடைச்சேரி இருக்க முடியாது. ஆகவின், கங்

கையின் கரையிலிருக்கிறது என்று அறிந்துகொள்ளவேண்டும். சொல்வோன் கருத்து வெள்ளமல்ல. ஆகலின் கங்கையோடு சையோக சம்பந்தமுடைய அதன் கரையை எடுத்துக்கொள்ளவேண்டும். இங்கு, கங்கை என்பதன் பொருள் முழுவதையும் விட்டு வேறு பொருள் கொள்ளப்படுதல் காண்க. இதனால் இது விட்டலக்கணை எனப்படும். இதனை, விட்ட வாகுபெயர் என்று தமிழிலக்கணங் கூறும்.

மேலும், மற்றுமோருதாரணம் கூறுகின்றேன், கேள்.

வயலில் மஞ்சத்தின்மேலிருந்து, ஒருவன், பறவைகள் தானியங்களைத் தின்றுவிடாமல் அவைகளை ஓட்டுவதற்காகச் சத்தமிட்டுக் கூவுகிறான். அது கேட்ட மற்றொரு வயலிலுள்ளவன் "அதோ! அங்கே ஒரு மஞ்சம் கூவுகிறது" என்கிறான். 'மஞ்சம் கூவுகிறது' என்னும் வாக்கியத்தில் பொருள் சரியாகப் பெறப்படவில்லை. ஏனெனில், மஞ்சமென்பது மரத்தால் செய்யப்பட்ட கட்டில்; அது கூவுதலைச் செய்யாது. ஆகவே, இங்கு இலக்கணையால் பொருள் கொள்ளுவது பொருத்தமாகும். மஞ்சத்தின்மீதுள்ள மனிதன் கூவுகிறான் என்பது சரியான பொருளாகும். இங்குக் கட்டிலின் பொருள் விடுபட்டுப்போய் ஆதேயத்தன்மைச் சம்பந்தமுடைய மனிதனை அந்த 'மஞ்சம்' என்னும் பதம் காட்டுவதால் இது விட்டலக்கணை யெனப்படும்.

இனி, விடாதலக்கணையை விளக்குகின்கிறன், கேள்.

## விடாத லக்கணை.

"சொல்லின் முக்கியமான பொருள் எதுவோ, அதனை விடாமலே அதனோடு சம்பந்தமுடைய வேறு பொருளைக் காட்டுவது விடாத லக்கணையாம்." இதனை விடாத வாகுபெயர் எனத் தமிழ் இலக்கணம் கூறும். இதனை விளக்க ஓர் உதாரணம் கூறுவோம்.

ஒரு குடியானவன் வீட்டில் இரண்டு மாடுகளிருந்தன. அவற்றுள் ஒரு மாடு சிவப்பு நிறம். மற்றொன்று வெண்மை. ஒருநாள் குடியானவன் தன் மகனை நோக்கி "எருதுகள் என்ன செய்கின்றன?" வெனக் கேட்டான். அதற்கு மகன் "சிவலை (சிவப்பு) நின்றுகொண்டிருக்கிறது வெள்ளை போய்க் கொண்டிருக்கிறது" என்கிறான். இங்கு சிவலை வெள்ளை என்னும் பதங்களின், நேரான (முக்கிய) பொருள், சிவப்பு வெண்மை என்னும் நிறங்களின் பெயர்களாம். சிவப்பு வெண்மை முதலிய நிறங்களின் பெயர்கள் ஒரு பொருள்களின் குணத்தைக் காட்டுவனவாம். குணங்கள் எப்போதும் ஒரு பொருளைச் சேர்ந்திருக்குமேயன்றித் தனித் திருக்கமாட்டா. சிவப்பு நிறம் ஓடுமா? வெண்மை நிறம் மேயுமா? இல்லை. ஆகவே, சிவலை நிற்கிறது; வெள்ளை போகிறது. என்பதில் பொருள் பொருந்தவில்லை. ஆகலின், இங்கு இலக்கணையால் பொருள் கொள்ளவேண்டியது அவசியமாகிறது. அவ்வாறு கொள்ளின் அந் நிறங்களோடு தாதான்மிய சம்பந்தமுடைய எருதுகள் என்று பொருள்படுகின்றது.

இங்குச் சிவலை வெள்ளை என்னும் சொற்களின் நேர் பொருளாகிய சிவப்பு நிறமும் வெண்மை நிறமும் விடப்படாமல் எருதுகளோடு ஒற்றுமைப் பட்டிருத்தலின் (விடாமல் சேர்ந்திருத்தலின்) விடாத லக்கணை யெனப்படும்.

இனி, விட்டுவிடாத லக்கணையை விளக்குவோம்.

## விட்டுவிடாத லக்கணை.

"சொல்லில் பொருத்தமில்லாமல் விரோதமாகவுள்ள ஒரு பாகத்தைவிட்டு விரோதமில்லாத மற்றொரு பாகத்தைக் கொள்ளுதல் விட்டுவிடாத லக்கணையாம்." உதாரணமாக:—

நாராயணன் என்பவனொருவன் காசி யாத்திரைக்குச் சென்றபோது அங்கே ஒரு பிரஹ்மசாரியாகவிருந்த தேவதத்தனென்பவனைப் பார்த்திருந்தான். பிறகு, சில ஆண்டுகளுக்குப் பின், நாராயணன் சென்னைக் கலாசாலை மாணவனாக அத்தேவதத்தனிருப்பதைப் பார்த்தான். சில வருடங்கள் கழிந்தபின், நாராயணன் தன் ஊரில் உபாத்தியாயராக விருந்தவரைப் பார்க்க நேர்ந்தபோது, அவரை முன்பு எங்கோ பார்த்ததாகக் கருதிச் சிறிது ஆலோசித்து, "அந்த இத்தேவதத்தன் (சோயந் தேவதத்த:)" என்கிறான். அவனே இந்த தேவதத்தன் என்பதில், 'அந்த, இந்த' என்னும் பதங்கள் ஒன்றுக்கொன்று விரோதமானவை. எவ்வாறெனின்: 'அந்த' என்னும் பதம் இறந்த காலத்தையும், காசி சென்னை என்னுமிடங்களையும், பிரஹ்மசாரி மாணவன் நிலைகளையும் காட்டும். 'இந்த' என்னும் பதம் நிகழ் காலத்தையும் நாராயணனது ஊரையும் உபாத்தியாயரையும் காட்டும். இவற்றுள், இறந்தகால நிகழ் காலங்களும், காசியும், நாராயணனுடைய ஊரும், பிரஹ்மசாரியும், உபாத்தியாயரும் ஒன்றுக்கொன்று விரோதமுள்ளவை. ஆகலின், காலங்களையும், ஊர்களையம், தொழில்களையும், (ஒன்றுக்கொன்று விரோதமுள்ளனவாகலின்) விட்டு, விரோதமில்லாத தேவதத்தனுடைய உடலை மட்டும் எடுத்துக்கொள்ளுதல். காசியிலிருந்தவனும் பின்பு சென்னையிலிருந்தவனும் இப்போது நாராயணனுடைய ஊரில் இருப்பவனும் ஒரே தேவதத்தனே என்பது அந்த இத்தேவதத்தன் என்பதன் பொருள். இவ்வாறு ஒரு பாகத்தை விட்டும் மற்றொரு பாகத்தை விடாமலும் பொருள்கொள்ளக் கிடத்திலின் இது விட்டுவிடாத லக்ஷணை அல்லது பாகத்தியாக லக்ஷணை எனப்படுகின்றது. இதனைத் தமிழிலக்கணம் விட்டுவிடாத வாகுபெயர் எனக் கூறும்.

சசிவன்ன! இப்பொழுது இம்மூன்று லக்ஷணைகளின் இலக்கணங்களை நன்றாகத் தெரிந்துகொண்டனையா?

சசி:—பெருமானே! லக்ஷணைகளின் தன்மையை நன்றாயறிந்தேன். இம் மூன்றுவகை லக்ஷணைகளுள் மகா வாக்கியத்தில் உபயோகிக்கத்தக்கதெது? என்பதைத் தெரிந்துகொள்ள விரும்புகிறேன்.

## மகா வாக்கியத்தில் விட்டுவிடாத லக்கணையே உபயோகமாமெனல்.

மாநந்தி:—மகா வாக்கியத்தின் உண்மைப் பொருளை யறிவதற்கு முதலிரண்டு இலக்கணைகளும் பயன்படா. ஏனெனில்,

விட்டலக்கணையில் வாக்கியத்தின் வாச்சிய பாகம் முழுவதையும் விட்டு வேறு பொருளைக் கொள்ளவேண்டும். அவ்வாறு மகா வாக்கியத்தில் கொள்ளவேண்டுமாயின் வேறு பொருளாகிய சூனியமே கொள்ளப்படவேண்டும். இது பொருந்தாது. இரண்டாவதாகிய விடாதலக்கணையின்படி பொருள் கொள்வதாயின், அங்கும் வாச்சியம் முழுமையு மிருத்தலோடு வேறு பொருளும் கொள்ளப்படுதலின் அதுவும் பயனின்றாம். ஆகவே, மூன்றாவதாகிய

விட்டுவிடாத லக்ஷணையே மகா வாக்கியத்தில் உபயோகமுடையதாகும். எவ்வாறெனின்:—

'அவன் இந்தத் தேவதத்தன்' என்றதில் விரோத பாகங்களாகிய இறந்த காலம் நிகழ்காலம், தூர தேசம் சமீப தேசம் முதலியவைகளை நீக்கி விரோதமில்லாத பாகமாகிய தேவதத்தன் ஒருவனே எனக் கொண்டாற்போல, மகா வாக்கியத்திலும் 'தத்துவம்' என்னும் இரு பதங்களின் விரோத பாகங்களாகிய, 'தத்' பதத்திலுள்ள காரண வுபாதிக ளேழினையும், 'துவம்' பதத்திலுள்ள காரிய வுபாதிகளேழினையும் அறிந்து, நீக்கி, அவ்விரு வுபாதிகளினும் அதிஷ்டானமாயுள்ள சேதன சொரூபத்தில் விரோதமின்மையை ஆராய்ந்துணர்க.

காரண வுபாதி காரிய வுபாதி என்னும் இருவகை யுபாதிகளையும் நீக்கி, அவை நீங்கின விடத்து, 'அவற்றின் சாக்ஷியாகவுள்ள அதிஷ்டான சேதனங்கள் ஈசுவரனும் சீவனுமாம்' என்று முன்புகொண்டிருந்த எண்ணத்தையும் நீக்கி, அவற்றின் உண்மையான சொரூபத்தை சசிவன்ன! நாம் கூறியபடியே அபரோக்ஷமாகக் கண்டுகொள்.

அபரோக்ஷமா யறியும் அருநெறி கூறல்.

ஞான நன்மகனே! பரப் பிரஹ்மமாகிய அவ்வகண்டப் பொருளை, அகக் கரணமும் புறக் கரணமுமாகிய தத்துவங்களனைத்தும் தொழிற்பட்டு நிற்குங் காலத்திலும் காணமுடியாது; அவை செயலற்று ஒடுங்கி நிற்குங் காலத்திலும் காண முடியாது. (தத்துவங்க ளனைத்தும் தொழிற்பட்டு நிற்குங் காலம் சகலமெனப்படும்.) இச்சகலம் நனவு கனவு (சொப்பனம்) என இருவகைப் பட்டிருக்கும். தத்துவங்கள் தொழிலற்று ஒடுங்கிக் கிடக்குங் காலம் கேவலம் எனப்படும். இது சுழுத்தி நிலையாம்.

அவத்தை மூன்றினடைவு கூறல்.

சசி:—ஞானதேசிக! தத்துவங்கள் தொழிற்படுங்காலம் தொழிற்படாக் காலம் என்னும் இரண்டு காலங்களின் தன்மையினை விளங்கக் கூறல் வேண்டும்.

மாநந்தி:—உள்ளும் புறமும் உள்ள கரணங்களெல்லாம் தொழிற்பட்டு நிற்கும் நிலை சாக்கிரமாம்; அந்தக் கரணங்கள் மாத்திரம் தொழிற்பட்டு நிற்கும் நிலை சொப்பன மெனப்படும்; அவ்வந்தக்கரணங்களும் அவித்தையில் ஒடுங்கி நிற்குங் காலம் சுழுத்தியாம்.

பிரஹ்மம் விளங்கும் பெருநிலை கூறல்.

சசி:—சாக்கிர சொப்பனங்களாகிய சகலாவத்தையிலும் சுழுத்தியாகிய கேவலாவத்தையிலும் அப்பொருளைக் காணமுடியாதென்றீர்களே! தயாநிதியே! மாந்தருக்குள்ளவை இவ்விரண்டு நிலைகளே யன்றோ? இவ்விரண்டிலும் காண முடியாதென்றால் வேறெந்த நிலையிற் காண்பது?

மாநந்தி:—பிரஹ்ம சாக்ஷாத்காரத்தை யடையும் நிலை வேறொன்றுளது. அது நனவிற் சுழுத்தி நிலை எனப்படும். அதாவது இந்தச் சாக்கிரத்திலேயே சுழுத்தியின் நிலையை யடைதல் வேண்டும். அந்த நிலையே சமாதி நிலை

யெனப்படும். இது சகல நிலையுமல்ல; கேவல நிலையுமல்ல; துரிய நிலையாம். இந்த நிலையை ஒருவன் அரும்பாடுபட் டடைந்தால் பிரஹ்ம அபரோக்ஷானுபூதியை யெய்தலாம்.

சசிவன்ன! சீவனுடைய சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி என்னும் இம் மூன்று நிலைகளையும் சாக்ஷியாக அறிந்து கொண்டிருந்தது எது? அத் துரிய நிலையாகிய பிரத்தியகாத்மாவே சீவனுடைய எதார்த்த வடிவமாம். இப்படியே அந்த ஈசுவரனுக்கும் மூன்றவத்தைகளையும் அறியும் துரியமென்னும் பிரஹ்ம ஸ்வரூபமே ஈசுவரனுடைய எதார்த்த வடிவமாம். இதுவே சுவேசுவரர்களின் எதார்த்த வடிவமாம். இவ்வாறு அறிந்தபின் ஜீவசாக்ஷியாகிய ஆத்மாவானது சர்வ சாக்ஷியாகிய ஈசுவரனுடைய துரிய ரூபப் பிரஹ்மமாக இருக்கின்றது. அவ்வொரு பொருளே சீவனுக்கும் ஈசுவரனுக்கும் அதிஷ்டானமாம். உபாதிகளால் வெவ்வேறாகக் காணப்படுகின்றனவே யன்றி, உபாதிகளைக் கழித்து நோக்கின் இரண்டும் ஒன்றேயென்றறிவதே முற்கூறிய தத்துவமசி மகா வாக்கியத்தின் முடிந்த பொருளாம் என்றறிக.

# 'ஞானசிந்தனை சந்திரோதயம்'

(ஆரியூர்-வ. பதுமநாப பிள்ளை.)

"உயர்வற உயர்நலம் உடையவன் எவன் அவன்
மயர்வற மதிநலம் அருளினன் எவன் அவன்
அயர்வறும் அமரர்கள் அதிபதி எவன் அவன்
துயர் அறுசுடர் அடிதொழுது எழு என் மனனே!"

அருளே திருவுருக்கொண்ட இறைவன் ஒருவனே, என்றுங் குன்றாத உயர்நலம் உடையவன் ஆவன். 'உயர்வற உயர் நல'மாவது, தன்னைத் தவிர்த்த வேறு எல்லாவற்றிலும் எவ்வாற்றாலும் எய்தும் எல்லாப் பெருமைகளும் தனது உயர்வின் முன் செஞ்சுடர்க் கதிரவனின் பேரொளியில் இருக்கும் இடம் தெரியாமல் மறைந்து நிற்கும் நட்சத்திரங்களைப் போன்று சிறுமைப்படுமாறு, ஒப்பும் உயர்வும் அற்றுத் தனிப்பெருஞ் சிறப்புடையதாக விளங்கும் அருட்பெருஞ் சோதி ஆண்டவனது உயர்வாகும். உலகத்தாரால் சிறப்புடையவைகளாக மதிக்கப்படும் செல்வம் நல்லுடல்வளம் செல்வாக்கு சிற்றின்பம் முதலியன எல்லாம், என்றேனும் ஒருநாள் அகன்று போய்விடும் தன்மையனவேயன்றி என்றென்றும் நிலைத்து நிற்கக்கூடியன ஆகா. கடல் சூழ்ந்த இவ்வுலகம் முழுவதும் தனது தனி ஆணை ஆழி ஒன்றே செல்லும் வண்ணம் சிங்காசனத்தில் வீற்றிருந்து செருக்குற்றிருக்கும் சக்கரவர்த்தியுங் கூட, வெவ்விய ஊழ்வலியால் பசிப்பிணியின் கொடுமையைப் பொறுக்க முடியாமல் செங்கோல் ஏந்திய செங்கரங்களிலே ஓடு ஏந்தி வீடுதோறும் சென்று நின்று அன்னம் இரந்து தன்னந்தனியனாய்த் தளர்ந்த நடையனாய்த் தெருவூடே செல்ல நேர்ந்து, தன்னைத் துரத்திவரும் சிறு நாய்க்கு அஞ்சி ஓட்டையும் கீழே போட்டுவிட்டு 'கைக்கெட்டியது வாய்க்கு எட்டாமல்' ஓடிப் போகக்கூடிய கேவல நிலையை அடையவும் கூடும். "குடை நிழலிருந்து குஞ்சரம் ஊர்ந்தோர்—நடை மெலிந்து ஓர் ஊர் நண்ணினும் நண்ணுவர்"—என்பது கேவலம் வாய் வேதாந்த வார்த்தை யன்று; சிற்சில ஆண்டுகளுக்கு முன்னர் இவ்வுலகத்தினரின் கவனத்தைப் பெரிதும் ஈர்த்து நின்று எண்ணிறந்த மன்னர்களைத் திகைக்கச் செய்த ஜர்மனி வேந்தர், இன்று எத்தகைய செல்வாக்கும் இல்லாதவராய் ஏழைத் தொழிலாளனைப் போலும் வருந்தி நிற்பதொன்றே அம்முதுமொழியின் உண்மையை நன்கு புலப்படுத்தும்.

ஆணவம் மிகுந்து எவரையும் மதியாது திரியச் செய்விக்கும் நல்லுடல் வளத்தைப் பெற்றிருப்போர், எதிர் பாராவாறு திடீரென பிணிவாய்ப்பட்டு உடலும் மனமும் ஒருங்கு வருந்த ஏனையோர் தயவை எதிர்பார்த்து ஏங்கிக்

கிடப்பவராய் பாயில் படுக்கை கொண்டுவிட நேர்ந்து விடுவதும் சர்வ சாதாரணமான சம்பவமே யாகும். நோய் வாய்ப்பட்டு மருத்துவரின் உதவியை எதிர்பார்த்து அகங்கலங்கிக் கிடக்கும் வேளையில்' அகங்கார மன ஆட்டம் எங்கே ? உற்சாகப் பந்தய ஓட்டம் எங்கே ? குலவுந் தோழர் கூட்டம் எங்கே ? நங்கையர் மீது நாட்டம் எங்கே ? எவரையும் மதியாத செருக்கு எங்கே ? கவலையை அறியாக் கருத்து எங்கே ? சுவைத்துக் களித்த உணவுகள் எங்கே ? துவைத்து உடுத்திய உடைகள் எங்கே ? இன்பப் பொருள்களாக கொண்டிருந்தவை எல்லாம் எங்கு ஒளிந்தனவோ ? இவ்வண்ணம் நிலையில்லாத 'இன்பப் பொருள்களை' நம்பி நிற்கும் உடல்வளத்தின் நலமும் ஒரு நலமாகுமோ ?

எவ்வெப் பொருள்களை இவ்வுலகத்தினர் இன்பம் விளைவிக்கக்கூடிய நலமுடையனவாக நினைத்து மதிமயங்கி நிற்பார்களோ, அவ்வப்பொருள்கள் அனைத்தும் விரைவில் மறைந்துவிடக் கூடியனவே யல்லது, என்றென்றும் நிலைத்து நிற்கக்கூடியன வன்று. ஆதலின் என்றென்றும் குறைவுறாத நல்லின்பத்தை நல்கக்கூடியன எவை ? தம்மோடு ஒப்பனவும் தமக்கு மேற்பட்டனவும் எவையும் இல்லாத தனிப்பெருஞ் சிறப்புடையன எவை ? ஒரு பிறப்பில் மட்டுமின்றி எப்பிறப்பிலும் தம்மை நம்பினோர்க்கு நலம் செய்யவல்லன எவை ? அவையே 'உயர்வற உயர்நலம்' உடைய இன்னருள் வடிவினனாகிய இறைவனது இணையடிகள் !

* * * *

மயக்கத்தைச் சிறப்பாக முப்பிரிவுகளாகப் பிரிக்கலாம். பயன் படுத்திக் கழித்த பழஞ்சட்டையை ஒத்து, அவ்வப்போது ஆத்மாவால் விலக்கப்பட்டு விடுவதும் பின்னர் கட்டையை ஒத்து எரிக்கப்படுவதும் ஆகிய புன் புலாலுடம்பை—பீளை ஒரு வழியாலும் சளி ஒரு வழியாலும் எச்சில் ஒரு வழியாலும் மலம் ஒரு வழியாலும் சலம் ஒரு வழியாலும் இழியும் ஊற்றைச் சரீரத்தை—ஆபாசக் கொட்டிலை—ஊன் பொதிந்த பீற்றல் துருத்தியை—சோறிடும் தோல் பையைப் பேணுவதிலேயே கண்ணும் கருத்துமாய் இருந்து, கேவலம் உலக சுகபோக அனுபவங்களுக்கு மட்டுமே அவ்வுடலைப் பயன்படுத்தக் கருதுவது ஒரு வகை மயக்கம். தன்னை வழிபட்டு உய்வதற்கு ஏற்றவாறு கடவுளால் கருணைகூர்ந்து அளிக்கப்பட்ட உடலை, புத்தியை மயக்கித் தம் வயப்படுத்தும் உலகப் பொய்யின்பப் பொருள்களை அனுபவிப்பதற்கு ஏற்றதாக எண்ணிச் சிற்றின்பச் சேற்றில் ஆழ்வது பெரும் பேதமையாகும். அவ்வாறு நிலையாப் பொருள்களில் நேயம் மிகுந்து என்றும் அழியா உண்மை இன்பத்தில் சற்றும் நாட்டமின்றி நாட்களைக் கழிப்போர், ஆற்றைக் கடக்கக் கொடுத்த தோணியைக் கொண்டு கரையேற முயல்வதைவிட்டு நீரோட்டத்தின் வழியே செல்லவிட்டு ஆபத்துக்கு உட்படுவோரையே ஒத்திருப்பர். அத்தகையோர் பிறவிப் பேற்றைப் பெற்றிடா தொழிவர்.

அருள் திருமேனி கொண்டு ஆலயங்களில் எழுந்தருளியிருக்கும் ஆண்டவனது திவ்யமங்கள விக்கிரகங்களை உண்மை யன்போடு சேவித்து ஆனந்திக்கவும் ஆன்ம உய்வுக்கேற்ற உள்ளத்தை உருக்கும் உத்தம அருள் நூல்களை ஓதி உணர்ந்து உவக்கவும் இறைவனால் அளிக்கப்பெற்ற கண்களை, மனத் தூய்மைக்கு மாசு செய்யவல்ல சிற்றின்ப காட்சிகளைக் காண்பதிலும் வாழ்

வில் பயன்படக்கூடிய சிறந்த நல்லுண்மைகளை உணர்த்தாது படிக்குங் காலத்தில் மட்டும் மகிழ்வூட்டிப் பின்னர் பயன்படா தொழியும் அற்ப விஷயங்களைக் கொண்ட புத்தகங்களைக் கேவலம் பொழுது போக்குக்காக மட்டும் வாசிப்பதிலும் பயன் படுத்துவது எவ்வளவு பேதைமை! அன்பு கனிந்து ஒழுகும் அருட்பாக்களைப் பாடவும் உத்தம விஷயங்களைக் குறித்து உரையாடவும் உதவப்பெற்ற வாயை, சிற்றின்பக் கிளர்ச்சியை விளைவிக்கும் இழிந்த பாக்களைப் பாடுவதிலும் அன்புநெறி கைவிட்டு அழுக்காறு மேற்கொண்டு பலரும் வெறுக்கக் கூடியவாறு புல்லுரைகளைப் பேசித் திரிவதிலும் பயன் படுத்துவது எவ்வளவு மதியீனம்! உயிர்க்கு உறுதி பயக்கக்கூடிய உண்மைப் பொருள்களைப் பெரியோரிடம் பன்முறையும் கேட்டுக் கேட்டு உய்வுறுமாறு இறைவனால் அளிக்கப்பெற்ற செவிகளை, கேவலம் ஊர் வம்பு மொழிகளை ஆர்வத்தோடு கேட்டு மகிழ்வதில் பயன் படுத்துவது எவ்வளவு அறியாமை!

ஆருயிர்கள் அனைத்தையும் காத்து ஆண்டருளும் தனிப்பெருந் தலைவனாகிய இறைவனுக்கு அடிமைப்பட்டு இன்புறக் கருதாமல், கேவலம் வயிற்றுப் பிழைப்பை முன்னிட்டு தன் மதிப்பை முற்றும் மறந்து வெட்கத்தைத் துறந்து மற்றொரு மனிதனின் கீழ் குற்றேவல்கள் செய்து அடிமை வாழ்க்கை நடாத்த ஆர்வங்கொண்டு அலைவது அறிவின் மயர்வுப் பெருக்கே யன்றோ! எத்தகைய பிழைகளை இழைத்திருப்பினும் அவற்றை உணர்ந்து கொண்டு அவற்றிற்காக பெரிதும் இரங்கி மனம் உருகிக் கதறி அழுது நின்று மன்னித் தருளுமாறு வேண்டிக்கொண்டால், அப்பிழைகள் அனைத்தையும் பொறுத்து அருள் பொழியும் கருணையங்கடலாகிய கடவுள் ஒருவரே நமது எஜமானனாக இருக்க, கேவலம் நிலைபேறில்லாத செல்வாக்குடைய ஒரு மனிதனுக்கு அடிமைப் படுத்திக்கொண்டு—அனைவர்க்கும் தனிப்பெருந் தலைவனாகிய ஆண்டவனைச் சிறிதுநேரம் சிந்தித்துத் துதிப்பதற்கும் ஓய்வு வாய்க்காதவாறு—காலத்தைக் கழித்துக் காலன் பதி அடையவோ நாம் இப்பூமியில் பிறந்தது!

"யான் 'எனது' என்னும் செருக்கு அறுப்பான்—வானோர்க்கு உயர்ந்த உலகம் புகும்"—எனும் பொய்யாமொழியின் உண்மையை பொருட் படுத்தாது, நிலைத்து நில்லாதன பலவற்றையும் தமக்கே உரிய சொந்த சொத்துகளாகக் கருதி இறுமாந்திருப்பது ஒரு பெரும் மயக்கமாகும். பிணி மூப்பு முதலியவற்றால் உடல்வலி குன்றிப் படுக்கையிற் கிடந்து பரிதவிப்போர்க்கு, 'எனது உடைமை' 'எனது அடிமை' என்று இறுமாந்து கூறிய தெல்லாம் மயர்வின் பயனே எனும் உண்மை நன்கு விளங்கிவிடக் கூடும். 'நம்முடைய பொருள்கள்' என்று பெரிதும் அபிமானித்திருப்பவை அனைத்தும் இம்மையில் மட்டும் பயன்படக் கூடுமேயல்லது, உயிர் உடலைத் துறந்து சென்ற மறுகணம் முதல் பயன் படுவனவாமோ? 'நம்முடைய மனைவி' 'நம்முடைய மைந்தன்' என்று பெரிதும் அபிமானித்திருந்தவர்கள் அனைவரும் இவ்வுலக வாழ்வில் மட்டும் ஒட்டி நிற்கக்கூடியவர்களே யல்லது, மறுமையில் சிறிதேனும் நமக்கு உதவி செய்யக் கூடியவர்கள் ஆவார்களோ?

இவ்வாறு உடலைப்பற்றிய மயர்வு, அடிமை செய்வதைப் பற்றிய மயர்வு, உரிமையைப்பற்றிய மயர்வு முதலிய மயர்வுகளெல்லாம் அறவே அகன்றொழியுமாறு—மெய்யன்பர்கட்கு மதிநலம் அருளக்கூடியவை எவை? 'நில்

லாதவற்றை நிலையென்றுணரும் புல்லறிவாண்மை'யைப் போக்கி, மெய்ஞ் ஞானத்தையும் பகவத்பக்தியையும் உண்டாக்கி உயிர்களை உய்விக்கக் கூடியவை எவை? அவைதாம், மெய்யன்பர்க்கு 'மயர்வற மதிநலம்' அருளும் ஆண்டவனின் அடியிணைகள்!

* * * *

("ஊக்கம் உடைமை ஆக்கத்திற்கு அழகு"—என்பது அறமொழி. தொழிலில் தலைப்படுவோர்க்கு, பெரும் பகையாக நிற்பது அயர்வு ஆகும். பயமும் துக்கமும் சிறிதும் இன்றித் திடமாக வேலை செய். தன் குழந்தைகளைப்பற்றி பகவான் கவலை எடுத்துக் கொள்ளுவார். 'நம்முடைய கடமை எல்லாம் வேலை செய்து, பின் மடிவதே!'—நியாயமானதைச் செய்; பலம் அளிப்பதைச் செய்; தூய்மை தருவதைச் செய். உயர்ந்த நோக்கத்தைக் கைக்கொள். அமைதியுடன் உயிர் துற. பெரிய விஷயங்களைப் பேசுவதில் பயனில்லை. உலகம் உன்னை அங்கீகரிக்காமல் இருக்கலாம், அதைப்பற்றி, அக்கரை இல்லை. உன்னுடைய சீரிய குணமே உன்னை ஆனந்தமாகவும் சுகமாகவும் இருக்கச் செய்யும்"—இவை ஒரு பெரியாரின் அருள் மொழிகள். இம் மணிமொழிகள் அறிவுறுத்தும் அரும் பெருமை உண்மைகளை ஒவ்வொருவரும் தத்தம் உள்ளத்தில் பசுமரத்தாணியெனப் பதியவைத்துக் கொள்ள வேண்டும். நல்வினைகட்குப் பல்வகைய இடையூறுகள் எய்துவது இயல்பு, கருமத்தின்மேல் கண்ணுயிருப்போர், எத்தகைய இடுக்கண்கள் எதிர்ப்பட்டாலும் சித்தத்திற் சிறிதும் அயர்ச்சி கொள்ளார். கருமத்தின் இடையில் விளையும் தடையைக்கண்டு அயர்ச்சி கொண்டுவிட்டால், தொடங்கிய தொழிலில் வெற்றி பெறுவது அரிதாய் விடும். ஆதலால், இறைவனது இன்னருளைத் துணைகொண்ட வலியால், கருமத்தினிடையில் விளையும் இடுக்கண்களைக் கண்டு கருத்துரங் குன்றுது—அயர்வை மேற்கொள்ளாது—என்றென்றும் தம் பணிகளில் இன்பம் காண்போரே இறைவனின் மெய்யன்பர்கள் ஆவர். அவ்வாறு அயர்வு அறியாது வாழ்வோரே, அந்தமில் பேரின்ப வீட்டில் இறைவனை இடைவிடாது இறைஞ்சி நிற்கும் இமையோர் ஆவர். அத்தகைய அமரர்களது அயர்வறியாத ஆனந்த மனநிலையை இத்தரணியில் வாழும் இறைவனது மெய்யன்பர்களுள் சிறந்தோரும் எய்துதல் கூடும். அவ்வண்ணம், விண்ணுலகில் தம்மைப் போற்றி நிற்கும் அயர்வறும் அமரர்களது ஆனந்த மனநிலையை, மண்ணுலகிலும் உண்மைப் பேரன்பர்கட்கு உறுவிக்கக் கூடியவை எவை? விண்ணுலக வாழ்வில் விளையும் ஆனந்தத்தைக் காட்டிலும் பன்மடங்கு சிறந்த பேரானந்தத்தை, தமது மெய்யன்பர்கட்கு எளிதில் எய்துவிக்கக் கூடியவை எவை? தம்மைச் சரண மடைந்தோர்க்கு உண்மை நெறிகளை விளக்கிக் காட்டி, அவர்களை உய்விக்கக் கூடியவை எவை? அவையே "அயர்வறும் அமரர்கள் அதிபதி"யின் அடியிணைகள்!

* * * *

இவ்வண்ணம், ஒப்பும் உயர்வும் இல்லாத தனிப்பெருஞ் சிறப்புடையனவும், தம்மைச் சரணடைந்தோரது அக இருளை அகற்றி—மயக்கத்திற்கு இடமில்லாத மெய்யறிவு ஒளியைக் காட்டி—அயர்வை அறியாத ஆனந்த வாழ்வை மேற்கொள்ளச் செய்யும் ஆண்டவனது அடியிணைகள், எவ்வகைத் துயரை

யும் நீக்கிவிடக் கூடியவை என்பதைச் சொல்லவும் வேண்டுமோ? ஆருயிர் களின்மேல், கொண்டுள்ள எல்லையில்லாத கைம்மாறற்ற தனிப்பெருங் கரு ணைப் பெருக்கினலே, தனது மெய்யன்பர்கட்கு எய்தும் துயரங்களை தனக்கு எய்தியனவாகவே தன் திருவுள்ளத்தில் கொண்டு, அவர்களது துய ரங்களை விரைந்து அகற்றுவதில் இறைவன் பெரிதும் முனைந்து நிற்பான். அருட்பெருஞ் சோதித் திருவினனாகிய ஆண்டவது அடியிணைகள், தமது ஞானப் பேரொளியைக்கண்டு ஆருயிர்கள் தம் பக்கலில் சரண்புகுந்து உய்வு பெற வேண்டி அருட்சுடர் பரப்பி நிற்பனவாகும். பால் குடிக்கப் புகும் பச்சிளங் குழவி தனது அன்னையின் அங்கங்கள் பலவற்றையும் விட்டுவிட்டு, தனது ஆர்வத்தைத் தீர்க்கக்கூடிய அன்னையின் தனங்களில் வாய் வைப்பதே போல்—இறைவனது இன்னருளை எய்த முயலும் மெய்யன்பர்கள், அவனது 'துயரறு சுடரடிக'ளையே தஞ்சமாக அடைவார்கள். ஆதலால், மனிதப் பிறவி வாய்க்கப் பெற்றதன் சீரிய பேற்றைப் பெற்று உய்யவேண்டுமாயின்—ஒப்புயர்வற்ற தனிப்பெரும் பெருமைபெற்ற நற்றுணையைப்பற்ற நாட்டம் கொள்வோமாயின்—மயக்கம் நீங்கி உண்மை தெளிந்து உய்வுற வேண்டு மாயின்—அயர்வை அறியாத ஆனந்த வாழ்வைப்பெற்று மண்ணுலகிலேயே விண்ணுலக இன்பத்தை நுகர வேண்டுமாயின்—பல்வகைத் துயரங்களும் பறந்தொழிய வேண்டுமாயின், அருட்பெருஞ்சோதித் தனிப்பெருங்கருணை யாளனாகிய ஆண்டவனது திருவடித் தாமரைகளிலே அடைக்கலம் புகுந்து உய்யக் கடவோம்! பொய்யின்பப் பொருள்களிலே மையல்கொண்டு அலை யும் மனக்குரங்கை, அருளே உருவாய்க் கொண்ட ஆண்டவனது திருவடி களைத் தினந்தோறும் உண்மை யன்போடு தொழுது பேரின்பத்தை நுகரக் கூடிய மானஸராஜ ஹம்ஸமாக மாற்றக் கடவோம்! மெய்ஞ்ஞான அறிவு ஒளி யாகிய ஆனந்த சந்திரிகையிலே பேரின்பம் துய்க்கக் கடவோம்! நமது நன் முயற்சிக்கு இன்னருள் வடிவினனாய இறைவன் திருஅருள் துணை செய்வ தாக!

# கம்பர் கண்ட உலாவியல்

——:(o):——

தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான். பீ. ஏ.

உலா என்பது, பெருங் காப்பியங்களினிடையே, காப்பியத் தலைவனை கதா நாயகன், தேரூர்ந்தோ, அன்றி யானை மீதேறியோ வீதியில் பவனி வருகின்ற சிறப்பையும் அழகையும் உரைப்பதாகும். கதா நாயகன், வீதியில் உலாப் போகின்ற பெருமையையும், அதனைக் கண்ட மாதரும் பிறரும் அவனைக் கொண்டாடும் விதத்தையும், புனைந்து பாடுதல் கவிமரபாகும். நாட்டின் நீர்வளம், நிலவளம், திணை வருணனை, திணை மயக்கம் முதலியன எவ்வாறு காவிய இலக்கணங்களாக அமைகின்றனவோ, அதேபோல, உலாவியல் வர்ணனையும் காவிய இலக்கணத்தின் ஒரு கூறாகும். பெருங்காப்பியங்களினிடையே, உலாவியல் வர்ணனையைப் பற்றி வரும் பாடல்கள் பல இருக்கும். சங்க காலத்துப் பஞ்ச காவியங்களில் சிறந்ததாகக் கருதப்படும். சீவக சிந்தாமணியில், சீவகன் உலாப்போந்த தன்மையை, திருத்தக்கதேவர், இலக்கணையார் இலம்பகத்தால், அழகொழுக எழுதி யமைத்திருக்கின்றார். கச்சியப்பரியற்றிய கந்த புராணத்தில், முருகன் உலாப்போந்த முறையை வர்ணிக்கும் செய்யுள்கள் பலவுள. கவியரசர் கம்பர் பெருமானே, இராமன் மிதிலைமா நகரில் உலாவந்த பெருமையையும் அப்போழ்து நிகழ்ந்த நிகழ்ச்சிகளையும் ஓர் தனிப் படலமாகவே பாடிவிட்டார். இன்னும் தமிழ்க் கவி உலகில், உலா என்பது ஒரு தனிப் பிரபந்தமாகவே வழங்கி வருகின்றது. விக்கிரம சோழனுலா, இராஜராஜனுலா என்னும் பிரபந்தங்கள் உலா வியலின் பெருமையை இனிது விளக்கும். உலாவப்போகும் ஒரு பெருமகனைக் காணுமாறு, மாதரெல்லாம் வீதியில் விரைந்து வந்து அடைதலும், வந்த மாதர், அவனழகில் ஈடுபட்டு, உள்ளம் குழைதலும், மற்றும் அம்மாதர் அவன் மேல் மையல் கொண்டு, காமப் பரவசராகி அவனைத் தொடர்ந்து ஏகுவதும், ஏகி அவனை வியந்து புகழ்வதும், இன்னும் இவைபோல்வன பிறவும் உலா என்னும் காவிய அங்கத்தின் இலக்கணமாகும்.

கம்பர் கண்ட உலா வியலின் தன்மையை ஆராயுமுன் புகழேந்தி எழுதிய நளவெண்பா போன்ற சிறு காப்பியங்களிடையிலும், காணுகின்ற உலா வியலின் தன்மையைப் பற்றி, ஒன்றிரண்டு சொற்கள் கூறுவது மிகையாகாது. நிடதர் கோமானாகிய நளன், தன் அரண்மனையைவிட்டுப் பூங்காவிற்குச் சென்றதை,

> "வாங்கு வளைக்கையார் வதனமதி பூத்த
> பூங்குவளைக் காட்டிடையே போயினான்."

என்று புகழேந்தியார் கூறுவதால், மாதரார் கண்களுக்கெல்லாம் நளன் இலக்காகி நின்றான் என்பது பெறப்படுகின்றது. மற்றும்,

"தேரின்றுகளைத் திருந்திழையார் பூங்குழலின்
வேரிப் புனல் நனைப்பவே யடைந்தான்."

என்று கவிஞர் கூறும் முறையில், அம்மாதர் நளனைத் தொடர்ந்து மொய்த்த னர் என்பதும் அவ்வாறு அவர்கள் மொய்த்த காலையில், அவர்கள் தலையில் அணிந்திருந்த பூக்களினின்றும் சொட்டிய தேன் துளிகள் நளன் ஏறிச் சென்ற தேரின் வேகத்தால் எழுந்த புழுதிக் கூட்டத்தைத் தண்ணீர் தெளித்து அடக்கியதுபோல அடக்கியது என்பதும், அழகாக அமைந்துள் ளன. ஆகவே, தெருவூடே, தேரூர்ந்து சென்ற தலைமகனுன நளனைக் காணு மாறு, மாதர்கள் கூடிக்கூடி நின்றதையும் அவனழகில் ஈடுபட்ட மாதர் அவன் மேல் தீராத மையல்கொண்டு அவனைத் தொடர்ந்து ஏகியதையும் கூறுமுகத் தான், புகழேந்தியார், இவ்வுலாவியலின் தன்மையை ஒரு சிறிது நமக்குக் காட்டுகின்ருர். இனி நாம், காப்பியங்களிலெல்லாம் சிறந்த காப்பியமாகக் கருதப்படும் கம்பரது இராம காதையில் உலாவியல் எம்முறையில் அமைந் துள்ளது என்று பார்ப்போம்.

மிதிலையில், முனிவர் முன் செலத் தம்பி பின்வரச் சென்ற இராமன், கன்னிமாடத்து மேடைமீது நின்ற சீதையைக் கண்டு காதலித்ததும், பின் னர் ஜனகனது பேரவையில், அளவிடற்கரியதோர் ஆற்றல்வாய்ந்த அரனது வில்லை யொடித்ததும், அதற்குப் பரிசமாகச் சீதையைப் பெற்றதும், கம்பர் கவிதை உணர்ந்த யாவரும் அறிவர். இவ்விராமன், தன் தம்பியர் புடைசூழ, சங்கமும், முரசமும் ஒலிக்க எழுந்து, "எழுதருந் தகையதோர் தேரின்மே லேறி" மிதிலை நகரின் வீதி வழியே உலாப் புறப்படுகின்ருன். செம்பஞ் சூட்டிய மெல்லிய பாதங்களையுடைய பெண்கள் கூட்டங் கூட்டமாய்வந்து, மஞ்சுதோய உயர்ந்த மாளிகையின் மாடங்களில் நிறைந்து நிற்க, அம்மடவார் தம் விடந் தோய்ந்த விழிகள், இராமனையே நோக்க, மதில்கள் சூழ்ந்த மிதிலா நகரத்தின் பெருந் தெருவைச் சென்றடைந்தான் என்பதைக் கவிஞர்,

"பஞ்சிசூழ் மெல்லடிப் பாவைமார் பண்ணைசூழ்
மஞ்சிசூழ் நெடிய மாளிகையின் வந்திடைவிராய்
நஞ்சிசூழ் விழிகள் பூமழையின் மேல்விழ நடந்து
இஞ்சிசூழ் மிதிலை மாவீதி சென்றெய்திஞன்."

என்று அழகாக எடுத்துரைக்கின்ருர். இம்மாதர்கள், கையிலணிந்துள்ள வளைகள் கழலவும், கூந்தல் சரிந்து தொங்கவும், பாதங்களில் அணிந்த பாத சரங்கள் பரத நூல் விதியை யொட்டி ஒலிக்கவும், விரைந்து, இராமன் உலா வருவதைக் காணவந் தெய்துகின்ருர்கள். அவர்கள் அவ்வாறு விரைந்து வந்த தன்மையைக் கவியரசர் கம்பர்,

"மானினம் வருவபோன்றும், மயிலினம் திரிவபோன்றும்
மீனினம் மிளிர்வபோன்றும், மின்னினம் மிடைவபோன்றும்
தேனினம் சிலம்பியார்ப்பச் சிலம்பினம் புலம்ப, எங்கும்
பூநனை கூந்தல் மாதர் பொம்மெனப் புகுந்து மொய்த்தார்."

எனக் கூறுகின்ருர்.

கண்ணால் மானினத்தையும், சாயலால் மயிலினத்தையும், அணிகலனால் மீனினத்தையும், இடையால் மின்னினத்தையும் ஒப்பர் மாதர் என்னும் விதி பற்றி, இம்மாதர் விரைந்துவந்த தோற்றத்தை, மானினத்தோடும் மயிலினத்தோடும், மீனினத்தோடும், மின்னினத்தோடும் இணைத்துக் கூறுவராயினர். "அடியிணைச் சிலம்பு பூண்டாற்றும்" என்று கூறிய கம்பரே, இங்கும், "சிலம்பினம் புலம்ப" என்று கூறினாலும் அவை எதற்காகப் புலம்புகின்றன என்று கூறினாரில்லை. இக்குறையை நிறைசெய்ய முன்வருவார் போன்று புகழேந்தியார் "மோட்டிளங் கொங்கை மூடியச் சுமந்தேறமாட்டாது" என்று சிலம்புகள் கதறிய சொற்களை விரித்துரைக்கின்றார். மற்றும், பொம்மென புகுந்து மொய்த்தார் என்று கூறும் முறையில் மாதர்கள் விரைந்து வந்த தன்மை அழகாகக் காட்டப்பெறுகின்றோம். பொம்மெனப் புகுதலும், கம்மெனக்கமழ்தலும் ஓசை நயத்தால் கவிஞர் கருத்தை நமக்குத் தெள்ளிதில் விளக்கும் ஆற்றல் வாய்ந்தவைகளாகும் என்பதில் ஐயமில்லை. இன்னும் இம்மாதர் விரைந்து வந்த தன்மையையே கவிஞர் சித்திரிக்க விரும்பி, அடுத்த செய்யுளை,

"விரிந்து வீழ் கூந்தல்பாரார், மேகலையற்ற நோக்கார்
சரிந்த பூந்துகில்கள் தாங்கார், இடைதடுமாறத் தாழார்
நெருங்கினர் நெருங்கிபுக்கு நீங்குமின், நீங்குமின் என்று
அருங்கல மனையமாதர் தேனு காளியின் மொய்த்தார்."

என அமைத்தருளுகின்றார். இம்மாதர்கள், அவிழ்ந்து வீழ்கின்ற கூந்தலை மதியாமலும், மேகலாபரணங்கள் அற்று வீழ்வதை உற்றுநோக்காமலும், சரிந்து வீழ்கின்ற மெல்லிய ஆடைகளை ஏந்தி நிற்காமலும் இடை தடுமாற, இதற்கெல்லாம் அஞ்சித் தாமதியாமல், தள்ளுங்கள் தள்ளுங்கள் என்று ஒருவரை யொருவர் தள்ளிக்கொண்டு நெருங்கிவந்து, தேனை யுண்ணவரும் வண்டுகளைப்போல் இராமனை மொய்த்துக்கொண்டார்கள் என்று கவிஞர் கூறும் முறையில் மாதர் விரைந்துவந்த தோற்றமும், அவர்கள் தலையவிழ்ந்து தொங்க, மேகலைகள் சரிந்து வீழ, ஆடைகள் அரையைவிட்டு நெகிழ நின்ற காட்சியும் நம்முன் விளக்கமாய்க் காட்டப்பெறுகின்றோம்.

"கண்ணினால் காதலென்னும் பொருளையே காண்கின்றோம். இப் பெண்ணின் நீர்மையினால் எய்தும் பயனின்று பெறுதும்." என்று கருதுபவராய், இம்மாதர் சிவந்த மேனியையுடைய அகலிகை கண்டு களித்த தாளையும் இயற்கை மணமமைந்த கூந்தலை யுடைய சீதையைப் பரிசமாகப் பெற வில்லொடித்த வீரக் கையையும், மலைபோன்று உரமுடைய தோள்களையுங் கண்டு கண்ணிமையாது நின்று இராமனது அழகைப்பாடுவாராயினர்.

"வீதிவாய்ச் செல்கின்றான்போல், விழித்திமையாது நின்ற
மாதரார் கண்களூடே வாவுமான் தேரிற் செல்வான்
யாதினும் உயர்ந்தோர் தன்னை யாவர்க்கும் கண்ணனென்றே
ஓதிய பெயர்க்குத்தானே உறுபொருள் உணர்த்திவிட்டான்."

இராமன் வீதி வழியே தேரூர்ந்து செல்பவன்போல் காணப்பட்டாலும் இயற்கையில், இமையாது நின்று கண்ட மாதர் தம் கண்களுக்குள்ளே தாவுகின்ற குதிரைகள் கட்டிய தேரில் செல்பவனையே அமைந்தான். ஆதலின் புலமை

மிக்க புலவர் எல்லாம், இவனுக்கிட்ட "கண்ணன்" என்ற பழம் பெயரைப் புதுக்குவான் போலவும், தான் அப்பெயருக்குப் பொருத்தமாதலை எல்லோருக்கும் உணர்த்துவான் போலவும் அமைந்து விளங்குகின்றான் என்று கவி கூறும் நயம் கண்டு மகிழ்வதற்குரிய தொன்றாகும். இதுவரை மாதரார் கூட்டம் இராமனைக் காண நெருங்கியும், விரைந்தும் வந்ததையும் அம்மாதர் இமையாது நின்று இராமனைக் கண்டதையும் விளக்கிய கம்பர் இனி அக்கூட்டத்தினிடையே ஒன்றிரண்டு பெண்களின் நிலையை மட்டும் தனித்தனியெடுத்துக் கொண்டு விளக்க முன்வருவாராயினர்.

இராமனைக் கண்டு அவனழகில் ஈடுபட்டு நின்ற ஒரு பெண் தன் உயிரொன்றைத் தவிர, தான் தாங்கி நின்ற பொருள்களான, ஆடையையும், கைவளையல்களையும், பழித்தலில்லாத பெண்ணலத்தையும், இயற்கைப் பண்பையும், குற்ற மற்ற அழகையும், தன் எண்ணத்தையும், அறிவையும், தேஜஸையும், வயிரத்தால் செய்த அணிகலன்களையும், நாணத்தையும், மடப்பத்தையும், தன்னிறையையும் இன்னும் தன்னிடத்திலுள்ள எல்லாப் பொருள்களையும் தாங்கலாகாது உகுத்து நின்றாள் என்பர் கவியரசர்.

> "பயிரொன்று கலையும், சங்கும், பழிப்பரு நலனும், பண்பும்
> செயிரின்றி யலர்ந்த பொற்பும், சிந்தையும், உணர்வும், தேசும்
> வயிரஞ்செய் பூணும், நாணும், மடனுந் தன்னிறையும் மற்றும்
> உயிரொன்று மொழிய எல்லாம் உகுத்தொரு தெரிவை நின்றாள்."

என்று கவியரசர் கவியாற்றுகின்றார். உயிரொன்றைத் தவிர, ஏனைய பொருள்களைத் தாங்க வலியற்றவராய், நின்ற நிலையையும், அவள் தாங்கலாற்றாத பொருள்களின் தொகையையும் எடுத்துரைக்கும் முறையை உற்று நோக்கினால் கம்பர் தங்கவி நலம் கைவரப் பெற்றவராவோம். இன்னும் மற்றொரு பெண், அகத்தே நிகழும் உணர்ச்சியை, இத்தகைய தெனப் புலப்படுமாறு கூற இயலாத தன்மை வாய்ந்ததும், இந்நிலமக்கள் அடையும் இன்பங்களி லெல்லாம் தலை சிறந்ததுமான, சொன்னலங் கடந்த காமச் சுவையையே, ஓர் உருவமாக்கி, இன்ப நயங்களை யெல்லாம் அறியவல்ல ஓவியக் கலைஞர் எழுதிய ஓர் ஓவியம்போல நின்றாள். அம்மங்கையோ, இலக்குமியை யொத்த அழகுடையாள் எனினும், இராமனைக் கண்டு அவன் அழகெனுந் தேறலை அமிதமாயுண்டு நின்ற நிலையில் தான் புனைந்துள்ள அணிகளெல்லாம் தன்னைவிட்டுக் கழன்று வீழத் தன்னையுந் தாங்கலாதாள் துகிலொன்றுந் தாங்கி நின்றாள் என்று உரைக்கின்றார் கவியரசர்.

> "சொன்னலங் கடந்த காமச் சுவையையோர் உருவமாக்கி
> இன்னலந் தெரியவல்லார் எழுதியது என்ன நின்றாள்
> பொன்னையும் பொருவு நீராள், புனைந்தனவெல்லாம் போகத்
> தன்னையும் தாங்கலாதாள் துகிலொன்றுந் தாங்கி நின்றாள்."

என்று கவிஞர் அருளிய முறையில், ஓவியத் தெழுதிய ஓர் பொற்பாவை போன்று நின்ற அம்மங்கையின் நிலையையும், இராமன்மேலுற்ற காதலால் தன்னுடல் மெலிந்து நலிய, அதனால் தானணிந்த பணிகளெல்லாம் கழன்று வீழத் தன்னையுந் தாங்க இயலாத தன்மை வாய்ந்த மெல்லிய துணி யொன்று மாட்டுந் தாங்கியவளாய் நின்ற நிலையைச் சித்தரித்துக் காட்டுந் திறம், கம்பர்

போன்ற பேரோவியக்காரர்கட்கு மட்டுமே இயலுமன்றி மற்றையோர்க்கு இய லாத காரியமேயாகும். இன்னும் மற்ெருரு பெண், தான் இராமனது அழகி லேயே ஈடுபட்டு, அக்கூட்டத்தில் அவனையன்றி வேறெவரையுங் காணுதவ ளாகி, இந்த உலாவில், இராமன் தனியே வருகின்ருனே என்று வினவுகின் ருள். இவள் இராமனைத் தவிர வேறென்றும் காணுதவளாகித் "நமியனே வள்ளல்" என்று கூறும் உரைகள் அவள் இராமன்பால் வைத்த இமையாத கண்ணேக்கத்தையும், அழியாத அன்பையும் தெள்ளிதில் விளக்குகின்றது. மற்ெருரு பெண்ணுே,

"தாக்கணங்கனையமேனி தைத்தவேள் சரங்கள் பாரான்
வீக்கிய கலனுந் தூசுரம்வேறு வேருனதோரான்."

என்ற நிலையில்தான் அமைந்திருந்தாள்.

இவ்வாறு பல பெண்கள் இராமனது பேரழகில் ஈடுபட்டுத் தத்தம் உணர்விழந்து நிற்க, மற்ெருரு பெண்ணுே தன் தோழியை நோக்கி, தோழீ! நம்முன்னே செல்லும், இராமனென்னும் வஞ்சகன், என் நெஞ்சிடை வந்து புகுந்துவிட்டான். அவன் என்னைவிட்டு ஓடிப்போகாத வண்ணம், கண்க ளென்கின்ற வழியைச் சிக்கென அடைத்துக் கொண்டேன். இவ்வாறு அவ னைச் சிறைசெய்த வண்ணமே, நாம் சென்று நம் அமளியைச் சேர்வோம் என்று கூறி விரைந்து சென்றதாகக் கவிஞர் கவியாற்றுகின்ருர்.

"மைக்கருங் கூந்தற் செவ்வாய் வாணுதல் ஒருத்தியுள்ளம்
நெக்கனள் உருகுகின்ருள், நெஞ்சிடை வஞ்சன் வந்து
புக்கனன் போகாவண்ணம் கண்ணெனும் புலங்கொள்வாயும்
சிக்கென அடைத்தேன் தோழீ ! சேருதும் அமளியென்ருள்."

என்பது கவிஞர் அருளிய கனிந்த செய்யுளாகும். இராமனுடன் கண்ணேடு கண் இணை கவ்வி யொன்றை யொன்று உண்ணவும் நிலைபெருது உணர்வும் ஒன்றிட "நின்ற சீதை தன் பெண்ணலனையும், தன்னுடன் பிறந்த நாணையும், தன் எண்ணத்தின் வழியியங்கும் உணர்வையுமிழந்து, இப்பொருள்களைக் கவர்ந்து சென்றவன் தன் கண்வழி நுழைந்த கள்வனை இராமனே யாகல் வேண்டும் என்று கருதுகின்ருள். கண்வழி நுழைந்து தன் பெண்ண லன், நாண், நிறையென்னும் பொருள் கவர்ந்து சென்ற கள்வன் என்று இரா மனைச் சீதை கருத, இங்கு இம்மங்கை, தன் கண்வழி நுழைந்த வஞ்ச நெஞ்சினனுகிய இராமனை, வெளியே செல்லவொட்டாது தன் கண்ணைப் பொத்தி தன்னிதயமாம் சிறையில் நிறுத்திய பெருமையைத் தன்னதாக்க நினைக்கின்ருள். இருவரில் யாரோ ஏற்ற முடையார் ?

இவ்வாறு இராமனைத் தொடர்ந்து சென்று கண்டு களித்த மங்கையர் நெருங்கிய அவ்வீதியோ, மன்மதன் எய்த மலர் அம்புகளில் மாதர்களுடைய நெஞ்சில் தைத்துக் கழன்றவையும், அம்மாதர்தம் மேனியி லெழுந்த வெந் தீயால் கரிந்த ஆபரணங்களும், அம்மாதர்கள் கொங்கைகள் வெயர்த்த காலத் தில் அவ்வேர்வை நீரால் அழிந்து வழிந்த சந்தனமும், சரிந்த மேகலைகளும், முத்து வடங்களும் சங்க வளையல்களும், நீண்ட கூந்தல் அவிழ்ந்து வீழ்தலால் சிந்திய பூமாலைகளும், நிறைந்து கிடந்ததேயன்றி அவ்வீதியில் வெற்றிடம் கிடைப்பது அரியதாயிருந்தது.

"வரிந்தவாள் அனங்கள்வாளி மனங்கழன்றனவு, மாதர்
எரிந்த பூணினமும், கொங்கை வெயர்த்த போதிழிந்த சாந்தும்
சரிந்த மேகலையும், முத்தும், சங்கமும், தாழ்ந்த கூந்தல்
விரிந்தபூந் தொடையுமன்றி வெள்ளிடை யரிதவ்வீதி."

என்பது கவிஞர் கூற்று. இவ்வாறு, நிறையிழந்தும், நிலையிழந்தும் நின்ற மாதர், இராமனைக் கண்டதைப்பற்றி ஒரேயொரு செய்யுள் கூறி நிறுத்துதும்.

"தோள் கண்டார் தோளே கண்டார், தொடுகழற் கமலமன்ன
தாள் கண்டார் தாளே கண்டார், தடக்கை கண்டாரு மஃதே
வாள்கொண்ட கண்ணார் யாரே வடிவினை முடியக் கண்டார்
ஊழ்கொண்ட சமயத்தன்னான் உருவு கண்டாரை யொத்தார்."

என்பது அச்செய்யுளாகும். இராமனது தோளழகைக் கண்டவர் அத்தோளழ கொன்றையுமே கண்டார்கள் வீரக்கழல் அணிந்த தாமரை மலரை யொத்த பாதங்களின் அழகைக் கண்டவர்கள் அவ்வழ கொன்றையுமே கண்டார்கள்; பெருமை பொருந்திய திருக்கரங்களின் அழகைக் கண்டவர்கள், அவ்வழ கொன்றையுமே கண்டார்கள் என்றால் அம்மாதரில் யாரே, இராமனது எழு தரிய திருமேனியின் அழகு முழுவதையும் கண்டவர்கள்! ஒருவருமில்லை என் பதே தேற்றம் ஒன்றற்கொன்று மாறுபட்ட சமய நூல்களைக் கொண்டு, இறைவனது திருவுருவைக் காணும் சமயவாதிகளே போல் ஒவ்வொருவரும் இராமனது திருமேனியின் ஒவ்வொரு அவயவங்களைப் பார்த்து அதனதன் பேரழகிலேயே ஆழ்ந்துகிடந்தனர். இராமனது வரைத்தடந் தோள்களின் அழகைக் கண்ட மாதர் அவ்வழகில் ஈடுபடாது நிற்பதும் இயலுமோ?

இராமனது தோளழகைக் கண்ட பெண்கள் மட்டுமே யல்ல, ஆடவருங் கூட பெண்ணாய்ப் பிறந்து, இராமனது தோள்களைத் தழுவும் பாக்கியம் பெற ஏங்கி நின்றனன் என்று கூறு முகத்தான் "ஆடவர் பெண்மையை அவாவும் தோளினாய்" என்று இராமனைக் கம்பர் அழைக்கின்றார். இராமனது சந்தார் தடந்தோள்களின் அழகை மாந்தி மாந்திக் களிப்புற்ற கவியரசர் "தோள் கண்டார் தோளே கண்டார்" என்று கூறுதல் வியப்பன்று.

இத்தகைய மாதர் கூட்டத்திலுள்ள ஒருத்தி, இராமனது வடிவழகைக் கண்ணாரக் காணும் பாக்கியம் பெற்ற கண்களையும், அவன்றன் இனிய மொழி களைக் கேட்டும் பாக்கியமுடைய செவிகளையும், அவன்றன் அகன்ற மார்பினைத் தழுவும் பேற்றையடைந்த முலைகளையும் அடையச் சீதை எத்தவம் செய்தன ளோ என்று ஏங்கி ஏங்கி நெஞ்சும் புண்ணாய் உலைந்து, அத்தகைய தொரு பேறு தனக்குக் கிட்டாததற்காக வருந்தி நின்றாள். இவ்வாறு மாதர்தம் நெஞ்சு புழுங்கிட அதனால் அவர் உணர்விழந்து வருந்திப் பெருமூச் செறிய இராமன் உலாப் போந்து ஜனகனது மண மண்டபத்தை எய்தினான் என்று கவிஞர் இராமன்போந்த உலாவை முடிக்கின்றார். கம்பர் கண்ட உலாவிய லைக் காணும் பாக்கியம்பெற்ற நாம், இராமனை யடையச் சீதை செய்த தவத்தி னும் சிறந்ததொரு தவம் செய்தவராவோம். தமிழ்நாடு செய்த தவப்பயனால் எழுந்த புலவர்களில் தலைசிறந்த பெருமகன் கம்பர் என்பதில் ஐயமுண்டோ?

---

# ஓமர் கயாம்

(கி. பா.)

ஓமர் கயாம் என்பவர் பாரசீக தேசத்துக் கவி. அவர் அனேக ஆண்டுகளுக்குமுன் ஜீவித்திருந்தார். அனேக கவிகள் பாடியிருந்தும் அவற்றில் முக்கியமானதும் தத்துவ ஆராய்ச்சி நிறைந்ததும் அவருடைய 'ருபாயாத்' (Rubaiyat) என்பதே. இதை ஆங்கிலத்தில் பிட்ஜ் ஜெரால்ட் (Fitzgerald) என்பவர் மொழி பெயர்த்திருக்கிறார். இங்கிலீஷ்காரர் மேற்படி கவியை மொழி பெயர்க்காமல் தானாகவே சாமார்த்தியமாய் மாற்றி எழுதியிருக்கிறார் பிட்ஜ்ஜெரால்ட் என்றும், பாரசீக கவியில் ஆங்கிலப் பதிப்பிலுள்ளவை அனேக மில்லையென்றும் வற்புறுத்தியிருக்கிறார்கள். இதை ஆராய இது இடமில்லை. ஆகவே, வசன நடையில் ஆங்கில மொழியில் இருக்கும் ருபாயாத்தின் கருத்தை வெளியிட முயல்கின்றேன். கீழ்நாட்டில் தத்துவ ஆராய்ச்சி பண்டைக் காலத்திலேயே மேன்மைப்பட்டிருந்ததற்கு இது ஓர் அத்தாக்ஷியெனச் சொல்லலாம். கவியின் மத்தியில் வரும் சில புதிய பதங்களுக்குக் குறிப்புகளாக அடியில் அர்த்தம் எழுதுகிறேன்.

"எழுந்திரு! காலை இரவின் மத்தியில் எறிந்த கல்லைக்கண்டு (1) நக்ஷத்திர ஒட்டகங்கள் பறந்தன. கீழ்த்திசை வேடுவன் அரசன் அரண்மனையின் நூபுரத்தைத் தன் வெளிச்ச வலையில் பிடித்துவிட்டான்.

அருணோதயத்தின் இடது கை வானத்தில் தோன்றியபோது நான் கண்ட கனவொன்றில் ஒரு வாக்கியம் என் செவியில் விழுந்தது. அவ்வொலி சத்திரத்தி னுள்ளிருந்து கிளம்பியது: "என் சிறு குழந்தைகாள்! எழுந்திருங்கள். ஆயுளின் ரசம் அதன் பாத்திரத்தினின்றும் ஆவியாய்ப் போவதற்குள் உங்கள் கோப்பையை நிரப்பிக் குடியுங்கள்."

பின்னர், கோழி கூவியபோது, சத்திர வாயிலில் நின்றவர்கள் "சீக்கிரம் கதவைத் திறவுங்கள். நாம் எவ்வளவு சிறியபோது இவ்விடத்தில் தங்கியிருப்போ மென்றும் ஒருமுறை போனபின் திரும்பி வரமாட்டோ மென்றும் நீங்கள் அறிந்ததே" என்று கூவினார்கள்.

புதுவருஷம் பிறந்தது. பழைய ஞாபகங்கள் வருகின்றன. ஆத்மா தனியாக உலாவச் சென்று பெரிய தீர்க்கதரிசிகள் இருந்ததையும் சென்றதையும் பற்றிச் சிந்திக்கிறது.

எத்தனை பேர் வித விதமான உடைகளை யணிந்து உலகத்தில் வாழ்ந்திருந்தனர்? அவர்கள் போய்விட்டனர்! எங்கே? (2) ஈராம் எங்கே? ஜாம்ஷிட் தன்னுடைய அமிர்தம் நிறைந்த கோப்பையை யெடுத்துக்கொண்டு எங்குச் சென்று னென்பது யாரு மறியார். ஆனல் முன்போலவே திராக்ஷைக்கொடியின் செம்பு வர்ணமுள்ள ரசமும், இவ்வோடையின் அருகில் ஒரு தோட்டத்து வாசனையும் இன்னும் இருக்கின்றன.

மகத்தான அரசனுன தாவீதின் (3) வாயடைத்துவிட்டது. ஆயினும் அவன் வசித்த பிரதேசத்து மஞ்சள் வர்ணமுள்ள பக்ஷி இரவில் ரோஜா புஷ்பத்தைக் குறித்து என்ன கூவுகிறது? "திராக்ஷ ரசம்! திராக்ஷ ரசம்! திராக்ஷ ரசம்! சிவப்பு ரசத்தைக்கொண்டு என் கன்னத்தைச் சிவப்பாக்கு!"

சரி, கோப்பையை நிரப்பு, வசந்த காலத்தின் நெருப்பில் மழை காலத்தின் மனந் திரும்புதலாகிய அங்கியைப் போட்டுவிடு. காலப் பக்ஷிக்கு பறப்பதற்கு சிறிது தூரமே யிருக்கிறது. அதோ! பறப்பதற்கு ஆரம்பித்தும் விட்டது.

அதோ பார்!—காலையில் ஆயிரக்கணக்கான புஷ்பங்கள் கிளம்பின—ஆயிரக்கணக்கானவை மண்ணிலே சிதறின. இக் கோடை முதல் மாதமே, ரோஜாவைக் கொண்டுவரும்போதே ஜாம்ஷிட்டையும் கைகோபாடையும் (4) கொண்டுபோய் விடும். ஆனுல் வயது சென்ற கயாமுடன் நீ வா. கைகோபாட்டும் கைகோஷ்ரூவும் (5) மறக்கப்படட்டும், ரஸ்டம் (6) தன்னிஷ்டப்படி சண்டை செய்யட்டும், அல்லது ஹதீம்டாய் கத்தட்டும் (7) அவர்களை சட்டை செய்யாதேயும்.

வாரும் என்னேடு! நாட்டையும் வனந்தரத்தையும் பிரிக்கும் பாதை வழியே சென்று அரசன் அடிமை யென்ற வித்தியாசத்தை யறியாத இடத்தை அடைந்து, முடிசூட்டிய சுல்தான் மாமூத் (8) மீது பச்சாதாபப்படுவோம்.

இங்கே பரந்த மரத்தினடியில் ஒரு சாராய ஜாடி, ஒரு பாட்டுப் புத்தகம், ரொட்டித் துண்டு—இவைகளோடு நீயும் பாடிக்கொண்டிருக்க வேண்டும்—வனந்தரமே போதுமான நந்தவன மாயிற்றே.

"ஆஹா! உலக சக்கராதிபத்தியம் எவ்வளவு இனிமையானது!" என்கிறார்கள் சிலர். "மோக்ஷ சாம்ராஜ்யம் எத்தனை மேலானது!" என்கிறார்கள் இன்னெரு சாரார். ஆ! நாளைக்கு வருகிற பலாப் பழத்தைவிட இன்றைக்கிருக்கும் களாப்பழத்தை அனுபவி. ஹோ! தூரத்தில் கேட்கிறதே அந்திக் கால தமுக்கு!

நம்மைச் சுற்றிப் புஷ்பிக்கும் ரோஜாவைப் பார். "ஓ! இவ்வுலகத்தில் எவ்வளவு அழகாக புஷ்பிக்கிறேன்!" என்று சிரித்துக்கொண்டு சொல்கிறது. ஆனுல் சில தினங்களில் இந்தப் புஷ்பம் வாடி வதங்கி இதழ்கள் பூமியில் விழுந்து விடுகின்றன.

மனிதர் எண்ணும் எண்ணங்களும் ஆசைகளும் நிராசையாய் சாம்பலாகின்றன. அல்லது நிறைவேறுகின்றன. ஆனுல் வனந்தரத்தில் உண்டாகும் பனிக் கட்டியைப்போல் ஒருமணி நேரத்திற்குள் மறைந்து போகின்றன.

வருஷா வருஷம் பயிரிட்டு அறுப்பறுத்த ஏழை மனிதரும், தானியத்தை லக்ஷியம் செய்யாமல் மழைபோல் நான்கு பக்கத்திலும் இறைத்தவரும், எங்கே? அவர்களுடைய தேகங்கள் பொன்மய மாகின்றனவா? அன்று, அன்று. மண்மய மாகின்றன,

சற்றே யோசித்துப் பார்! இந்தச் சத்திரத்தில், பகலையும் இரவையும் கதவுகளாயுள்ள சத்திரத்தில் எத்தனை அரசர்கள் ஆடம்பரமாக ஒருமணி நேரமோ இரண்டு மணியோ தங்கிவிட்டுப் போயிருக்கிறார்கள்?

ஜாம்ஷிட் மேன்மையா யிருந்து நன்ருகக் குடித்தவிடத்தில் இப்போது சிங்கமும் பல்லியும் அரசாள்கின்றன. பாஹ்ராம்—(9) அந்த பெரிய வேட சிங்கம்—அவனைப் புதைத்திருக்கும் இடத்தின்மேல் காட்டுக் கழுதை எதேச்சையாய்க் கேட்பாரின்றித் திரிகின்றது.

எனக்குச் சிற்சில சமயங்களில், தரையில் புதைக்கப்பட்டிருக்கும் பெரிய அரசனின் தேகத்தினின்றுமே அழகான ரோஜா புஷ்பங்கள் கிளம்புகின்றன வென்றும், மற்ற புஷ்பங்கள் ஓரழகிய ஸ்திரீயின் தலையினின்றும் தரையில் விழுந்தே பிறகு முளைக்கின்றன என்றும் தோன்றுகிறது.

இதோ இந்த செழுமையான கொடி ஆற்ருேரத்தில் சிங்காரமாய்த் தோன்றுகிறதே—ஆ! அதன்மேல் அழுத்தமாகச் சாயாதே!—அது எவ்வளவு அழகான உதடிலிருந்து கிளம்பி யிருக்கிறதென்று யாரே யறிவர்!

ஆ! என் கண்ணே! பழைய வருத்தங்களையும் எதிர்காலக் கிலேசங்களையும் மறக்கச் செய்யும் கோப்பையை நிரப்பு! நாளைக்கா?—ஏன், நாளைக்கு நானே நேற்றைய ஏழாயிரம் (10) வருஷங்களி லொருபாக மாகிவிடலாமே?

ஓ! சிலரை நாம் காதலித்தோம்—எவ்வளவு சிறந்தவர்கள்—அழகானவர்கள்!—அவர்களுடைய சத்தை நாளும் விதியும் கசக்கிப் பிழிந்துவிட்டனவே! அவர்கள் நம்மோடு சிறிது காலத்திற்குமுன் சாராயங் குடித்துக்கொண் டிருந்தார்கள். அதன்பின் ஒவ்வொருவராய்த் தீராத் துயிலில் அழுந்திவிட்டார்கள்.

நாம்—இப்போது இப் பிரகாசமான அறையில் உல்லாசமாய்க் காலங் கழிக்கும் நம்மை விட்டுச் சென்ருர்கள். சிறந்த கோடைகால ஆடைகளையும் மதித்திலர்—நாமும் இத்தரைப் படுக்கைக் கடியில் போகவேண்டியதுதானு? யாருக்குப் படுக்கையாக நாம் போவது ?

ஆ! தற்காலம்—நமக்கிருக்கும் ஜீவிய காலத்தை உல்லாசமாய்க் கழிப்போம். நாமும் மண்ணில் விழுவதற்குமுன்—மண்ணேடு மண்ணுகை, மண்ணினடியில் படுக்க—சாராயமின்றி, பாட்டுமின்றி, பாடகருமின்றி—முடிவுமின்றி!—உல்லாசமாய்க் கழிப்போம்!

அந்தோ! இன்றைக் குறித்து ஆயத்தம் செய்வோருக்கும், நாளையைக் குறித்து ஆவலாய் எதிர் பார்ப்போருக்கும், இருட்டாகிய தூரபுரத்தினின்றும் ஓர் மியூசின் (11) கத்துகிருன்: ஏ மடையர்களே! உங்களுக்குப் பலன் இங்குமல்ல, அங்குமல்ல!

ஏன்? ஈருலகத்தைப்பற்றிப் பலமான விவாதத்தை நடத்திய தீர்க்கதரிசிகளும் ரிஷிகளும்—வெளியே தள்ளப்பட்டார்கள். அவர்களுடைய வார்த்தைகள் தூற்றப்பட்டன. அவர்கள் வாயில் மண் விழுந்திருக்கிறது!

ஓ! கயாமுடன் வாருங்கள். நிபுணர்கள் வம்பளக்கட்டும். ஒரு விஷயம் நிச்சயம்—ஜீவிய காலம் பறக்கிறது. ஒரே ஒரு விஷயம் மாத்திரம் உண்மை—மற்றவை யெல்லாம் பொய்—ஒருமுறை புஷ்பித்த மலர் நிரந்தரமாக இறக்கிறது.

நான் சிறுவனு யிருந்தபோது, நிபுணர்களையும் தீர்க்கதரிசிகளையும் விரும்பி அடைந்து அரிய பெரிய விஷயங்களைக் குறித்து அவர்கள் சொல்வ

தெல்லாம் ஆவலோடு கேட்டேன். ஆயினும் சதா நான் போன வழியே திரும்பி வரவேண்டியதாயிற்று.

அவர்களோடு ஞான விதையை நானும் நட்டேன். என்னுடைய சொந்தக்கையினாலே அதை வளர்த்தேன். ஆனால் கடைசியில் நான் அறுத்த அறுப்பு இதுதான்:—"தண்ணீர்போல் வந்தேன், காற்றைப்போல் போகிறேன்!"

இவ் வுலகத்திற்குள் 'ஏன்?' என்றறியாமல் வந்தேன். 'எங்கிருந்து?' என்றறியாமலும், என் இஷ்டத்தைச் சட்டை செய்யாமலும் நீர் பள்ளத்தை நோக்கி ஓடுவதுபோல் ஓட்டப்பட்டேன். இவ்வுலகத்தினின்றும், 'எங்கு?' என்பதை யறியாமல், பாலை வனக் காற்றுபோல், என் இஷ்டத்தைக் கவனியாமல் ஓட்டப்படுவேன்.

என்ன? என்னைக் கேட்காமல் எங்கிருந்து இங்கு கொண்டு வரப்பட்டேன்? என்னைக் கேட்காமல், எங்கு கொண்டுபோகப் படுவேன். இப்படிக் கேள்வி கேட்கும் அதிகப்பிரசங்கித்தனத்தை யடக்க மேலும் மேலும் கோப்பைகளை நிரப்பு!

பூமியின் மத்தியிலிருந்து ஏழாவது வாயிற்படி வழிசென்று சனி (12) யின் சிம்மாஸனத்தின்மீது உட்கார்ந்தேன். வழியில் எத்தனையோ முடிச்சுகளை யவிழ்த்தேன். ஆயினும் மனித மரணம், விதி யென்னும் சிக்கலை மாத்திரம் பிரிக்க முடியவில்லை.

அங்கு ஒரு கதவு இருந்தது—அதற்குச் சாவி கிடைக்கவில்லை. அங்கு ஒரு திரை போட்டிருந்தது. அதற்கப்புறம் என்னால் பார்க்க முடியவில்லை. சிறிதுபோது 'நீ' யென்றும் 'நான்' என்றும் பேச்சிருந்ததுபோலிருந்தது —அதன்பிறகு 'நீ'யு மில்லை, 'நானு' மில்லை!

அதன் பிறகு பரந்த பரமண்டலத்தையே நோக்கிக் கத்தினேன்!—"இருட்டில் தடுமாறுகின்ற தன் சிறு குழந்தைகளுக்கு விதி என்ன விளக்கைத் தந்திருக்கிறது?" என்றேன். "குருட்டுப் புத்தி!" என்று பரமண்டலம் பதிலளித்தது! பிறகு அங்கிருந்து இறங்கித் தரை மட்டத்திற்கே வந்தேன். என் உதட்டை ஜீவியக் கிணற்றிலிட்டு அதன் உண்மையை யறியக் கருதினேன். என் உதடோடு உதடு வைத்து—"உயிரிருக்கும்போது குடி!—ஒருமுறை இறந்தபின் நீ திரும்பமாட்டாய்" என்றது. இம்மாதிரி பதிலளித்த பாத்திரத்திற்கு ஒரு சமயத்தில் உயிருந்திருந்து, உல்லாசமா யிருந்தது என்று எனக்குத் தோன்றுகிறது. இப்போது நான் முத்தமிடும் அதன் குளிர்ந்த உதடு, எத்தனை முத்தங்கள் பெற்றிருக்கும்—கொடுத்துமிருக்கும்!

ஏனெனில், ஒருதினம் சாயங்காலம் நான் குயவன் தன் ஈர மண்ணைத் தட்டும்போது கவனித்திருந்தேன். அப்போது அம்மண் தன் மெல்லிய குரலால்—"மெதுவாக, அண்ணே, மெதுவாக!" என்று இரந்தது.

ஆ! கோப்பையை நிரப்பு:—காலம் பறக்கிறது என்று அடிக்கடி வற்புறுத்துவதில் என்ன பிரயோஜனம்? 'இன்றைக்கு' சந்தோஷமா யிருந்தால் பிறக்காத நாளையையும் இறந்த நேற்றையும் குறித்து வருந்துவானேன்?

இறப்பு என்னும் வனாந்தரத்தில் ஒரே நிமிஷம்! ஜீவிய மென்னும் கிணற்றின் ருசியை அனுபவிப்பது ஒரே நிமிஷம்!—நக்ஷத்திரங்கள் மறைகின்றன.

ஒட்டகங்கள் சூனிய மென்னும் அருணோதயத்தைக் குறித்துக் கிளம்புகின் றன—ஓ! துரிதப்படுத்துங்கள்!

எத்தனை நாள், எத்தனை நாள், இதைக்குறித்தும் அதைக் குறித்தும் கணக்கின்றித் தேடித் திரிவது? பலனில்லாத அல்லது கசக்கும் பலனுடன் கூடிய பொருளைப்பற்றி வருந்துவதைவிட இனிக்கும் திராட்சைப் பழத்தைக் கொண்டு சந்தோஷித்திருப்பது நன்று.

அன்பர்களே! நான் வெகு நாட்களுக்குமுன்பே சிந்தையைப் போக்கி திராக்ஷக்கொடியின் மகளை விவாகஞ் செய்துகொண்டு உங்களுக்கும் விருந்து செய்தது தெரிந்ததன்றோ?

"உண்டு," "இல்லை" "மேலும் கீழும்" என்று இதுபோன்ற தத்துவ ஆராய்ச்சிகளை நான் நூல்களோடும் என் சுய புத்தியோடும் செய்தே னாயி னும், அவைகளைப்பற்றி எனக்கு அக்கரை கிடையாது. நான் அக்கரை வைத்தது திராக்ஷ ரசமே.

சமீபத்தில் சத்திரத்தின் கதவைத் திறந்துகொண்டு சாயங்காலப் போதில் ஒரு தேவதூதன் தோளில் ஒரு ஜாடியைத் தாங்கி வந்தான். அதி லிருந்து எனக்கும் சிறிது கொடுத்தான்—ஆ! அது திராக்ஷ ரசமாகவே யிருந்தது!

திராக்ஷ ரசமே சிறந்த தத்துவம். எழுபத்திரண்டு தத்துவங்களையும் தள்ளிப் போடும் உன்னதமான தர்க்க சாஸ்திரமது. அதுவே மண்ணைப் பொன்னாக்கும் மந்திரக் கருவி.

அதுவே மனதிலெழும் சங்கைகளையும், பயத்தையும், வருத்தத்தையும் உதறித் தள்ளும் சுல்தான் மாமூதுபோன்ற சக்திபெற்ற அரசன். தன்னுடைய மாயக் கத்தியால் இவைகளை வீசி யெறிகின்றது.

சரி, நிபுணர்களிடத்தில் உலகத்தின் தத்துவத்தை விட்டு விட்டு என் னுடன் ஒரு மூலையில் உட்கார வா. நம்மைப் பரிகசிக்கும் இந்த லீலையைக் குறித்துப் பரிகாசம் செய்வோம்.

உள்ளும் புறமும், மேலும் கீழும், சுற்றியும் இது ஒரு மாயத் தோற்ற மாகவே யிருக்கின்றது. பிரபஞ்சமும் ஒரு பெட்டி, சூரியனே மத்தியிலிருக் டும் சிறு விளக்கு. நாம் அதைச் சுற்றிவரும் போலி உருவங்கள்!

நீ குடிக்கும் சாராயமும், நீ முத்தமிடும் உதடும், மற்றவைகளைப்போல் அநித்தியமானவையாயின்—ஆம்—நீ இருந்தாலும் இறந்தாலும் ஒன்றுதான் அல்லவா. இப்போதிருப்பதைவிட கேடான நிலைமை கிடையாது.

ஆகவே, ரோஜா புஷ்பம் ஆற்றோரத்தில் ரம்மியமாகப் புஷ்பிக்கும் போதே கயாமுடன், இந்தச் சிவந்த சாராயத்தைக் குடி. பின்னர், காலன் தன் கருத்த பானத்தைக் குடிக்கச் செய்தானாகில்—பயப்படாமல் அதைக் குடி.

இவ்வுலகம் ஒரு சொக்கட்டான் தட்டு, விதியே ஆடுவோன், மனி தர்களே காய்கள்—சொக்கட்டான் கட்டைகள். இங்கும் அங்கும் தள்ளிப் போட்டு, சேர்த்தும் பேர்த்தும், ஒவ்வொருவராகப் பெட்டியில் போட்டுவிடு கிறது.

பந்து விளையாட்டில், பந்தை யேனென்று கேட்பார் யார்? விளையாடு பவன் எப்படி உதைக்கிறானோ அப்படி வலப்புறமும் இடப்புறமும் ஓடுகிறது. ஆனால் உன்னை மைதானத்தின் மத்தியில் உதைத்தவன் அறிவான்—அவனுக்கு எல்லாம் தெரியும்!—ஆம் அவன் அறிவான்!

அசையுங் கை எழுதுகிறது—எழுதிய பின்னும் அசைந்து செல்லுகிறது. உன்னுடைய பக்தியோ, சாதுரியமோ அதைப் பின்னுக் கிழுத்துப் பாதி வரியையும் அழிக்கச் செய்யா. உன்னுடைய கண்ணீர் அவ்வெழுத்தில் ஒன்றையும் அழிக்காது.

நாம் ஆகாயமென்று சொல்லும் கவிழ்த்த கிண்ணத்தை நாம் பூமியில் ஊர்ந்து வசித்து இறக்க, மேலே நிற்கும் கிண்ணத்தைக் குறித்து சகாயஞ் செய்யும்படி உன் கைகளைக் கூப்பாதே. அதுவும் உன்னையும் என்னையும் போல் சக்தி யற்றே உழல்கிறது!

பூமியின் முதல் மண்ணிலிருந்து கடைசி மனிதனைச் செய்தார்கள். கடைசி அறுப்புக்காக முதல் விதையை விதைத்தார்கள். சிருஷ்டி யன்றைய காலையிலேயே, சங்கார காலத்தில் இப்படி யிருக்க வேண்டுமென்றும் திட்டஞ் செய்துவிட்டார்.

நான் சொல்லுகிறேன்—முதலில் என்னைச் சிருஷ்டித்தபோதே நீ இவ்வாறிருக்க வேண்டுமென்று எனக்குத் திட்டஞ் செய்து இவ்வுலகத்தில் தள்ளிவிட்டார்கள்!

திராக்ஷைக்கொடி என்னைச் சுற்றிக்கொண் டிருக்கிறது—நிபுணர்கள் எப்படி வேண்டுமானாலுஞ் சொல்லட்டும்—என்னுடைய நீச தேகத்திலிருந்தே ஒரு சாவியைச் செய்து அவர்கள் திறக்க முடியாத கதவை நான் ஒருகால் திறக்கக் கொடுத்து வைக்கலாம்!

இது மாத்திரம் எனக்கு நன்றாய்த் தெரியும். மெய் விளக்கு என்மேல் அன்பு கொண்டாலும் சரி, என்னை அதன் சுடர் கொளுத்தினாலும் சரி, அதைக் கோயிலிலிருந்து காணமுடியாமல் தவிப்பதைவிட சத்திரத்தினின்றும் ஒருமுறை பார்த்துவிட்டுத் திருப்தி யடைவது மேலானது.

ஓ! நான் நடக்கும் வழியில் சாராயத்தை வைத்துப் பள்ளத்தாக்குகளில் தள்ளப் பார்ப்பவனே! விதி விதி யென்று சொல்லி என்னை பந்தப் படுத்தி, பின்னர் பாவி யென்று சொல்லாதே!

ஓ! மண்ணைக்கொண்டு மனிதனைச் செய்தவனே! உலகத்தில் நன்மையோடு தீமையையும் சிருஷ்டித்தவனே! மனிதனுடைய முகம் எவ்வளவு பாவத்தோடு கறுத்திருந்தாலும், அவனுக்கு மன்னிப்புக் கொடுத்து விடுவாயாக!

* * * *

மறுபடியும் கேள்! ஒரு சாயங்காலம், ரம்ஜான் பண்டிகைக் கப்புறம், பிறைச் சந்திரன் வருவதற்குமுன், மேலேகூறிய குயவனுடைய கடையில், நான் பானைக் கூட்டத்தின் மத்தியில் தனியாக நின்றேன்.

அப்போது ஆச்சரியத்தை என்னென்று சொல்வேன்!—சில பாண்டங்கள் பேசக்கூடும்போ லிருக்கிறது, சில பேசமுடியாதுபோ லிருக்கிறது. திடீ

றென்று, பொறுமையற்ற ஒரு பாண்டம் "குயவன் யார், ஐயா, பாண்டம் யார்?" என்றது.

அப்போது இன்னொன்று:—நான் காரணமில்லாமல், பூமியினின்றும் எடுக்கப்படவில்லை; என்னை ஒருருவமாகச் செய்தவன் மறுபடியும் என்னை வெட்டி மண்ணுக்கே திருப்பமாட்டான் என்றது.

இன்னொன்று, "தான் சந்தோஷமாகக் குடித்த பாத்திரத்தை எந்த முரட்டுப் பையனும் உடைக்கமாட்டான். அன்பின் பெருக்கால் பாண்டம் வனைந்தவன், கோபத்தினால் திடீரென்று உடைத்து விடுவானா?" என்றது.

ஒருவரும் இதற்குப் பதிலளிக்கவில்லை. ஆனால் சிறிது நேரஞ் சென்று விகாரமான உருவத்தோடு கூடிய ஒரு பாண்டம் சொல்லிற்று: "என்னைப் பார்த்து எல்லோரும் கேலி செய்கிறார்கள். என்ன? என்னைச் செய்தபோது குயவன்கை நடுங்கிற்றா?"

இன்னொன்று சொல்லிற்று, "ஜனங்கள் ஒரு சத்திரக்காரனைப்பற்றிக் கூறுகிறார்கள். அவன் முகத்தில் நரக மென்கிற கரி பூசியும் வைக்கிறார்கள். நம்மை ஏதோ சோதனை செய்வதாக அவன் சொல்லப்படுகிறான்—சே! சுத்த பிசகு. அவன் வெகு நல்லவன். எல்லாம் சரியாய் முடியும்."

அப்போது இன்னொன்று வருத்தத்துடன் மொழிந்தது, "என் மண் கேட்பாரின்றி நீண்டகாலமாக உலர்ந்திருக்கிறது. ஆனால் என்னைச் சாராயத்தைக்கொண்டு நிரப்பும். நான் நாளடைவில் உயிர் பெறுவேன்" என்றது.

இப்படி இவை பேசிக்கொண்டிருந்தபோது, பிறைச் சந்திரனை ஒன்று பார்த்துவிட்டது. அப்போது ஒன்றை யொன்று எச்சரிக்கை செய்துவிட்டு "அண்ணே! அண்ணே! கதவு திறக்கிறாப்போ லிருக்கிறது!" என்றன.

* * *

ஆ! என் உலர்ந்துபோகும் ஜீவனுக்குச் சாராயத்தை வழங்கு! நான் இறந்தபின் சாராயத்தால் என் உடலைக் கழுவு! என் பிரேதத்தை திராக்ஷை யிலையால் மூடி, ஒரு ரம்மியமான தோட்டத்தின் அருகில் என்னை அடக்கஞ் செய்!

என்னுடைய சாம்பலும், ஆகாயத்தில் சாராய வாசனையையே எழுப்பி, என் கல்லறைப் பக்கம் வரும் பக்தர்களும் அந்த வாசனையைக்கண்டு மயங்க வேண்டும்.

அந்தோ! நான் இதுவரையிலும் விரும்பிவந்த பொருள்கள் மனிதரிடையில் எனக்குக் கௌரவம் கொடுக்காமல் என்னைத் தாழ்த்திவிட்டன. என் மதிப்பு ஒரு கோப்பைக்குள் முழுக்கப்பட்டு, என் நல்ல பெயர் ஒரு பாட்டிற்காக விற்கப்பட்டது!

வாஸ்தவம், வாஸ்தவம்! நான் அடிக்கடி நல்லவனா யிருக்கிறேனென்று வாக்குக் கொடுத்திருக்கிறேன்—ஆனால் நான் அவ்வாறு சத்தியஞ் செய்யும் போது என் சுய புத்தியோடிருந்தேனா? அதற்குப் பிறகு, வசந்த காலம் புஷ்பங்களோடு வந்து என்னிடமிருந்த சிறிது நல்ல குணத்தையும் கிழித்துவிட்டது.

ஆயினும் சாராயம் என்னை மயக்கச் செய்தும், என்னுடைய கௌரவ அங்கியைத் திருடிச் சென்றாலும், சாராயக் கடைக்காரர்கள் சாராயத்தைப் போல் அவ்வளவு மதிப்புள்ள வஸ்துக்கள் வேறெதை வாங்குகிறார்கள் என்று நான் ஆச்சரியப்படுகிறேன்.

அந்தோ! வசந்த காலம் ரோஜா புஷ்பத்தோடு இவ்வளவு சடுதியில் போய்விட வேண்டுமா? பாலியத்தின் வாசனை பொருந்திய எழுத்துக்கள் முடிந்து போகவேண்டுமா? செடியில் இன்னிசையோடு பாடியிருந்த குயில்—எங்கிருந்து வந்தது? எங்குபோயிற்று?—யாருத் தெரியும்?

என் அன்பே! நீயும் நானும் விதியோடு சூழ்ச்சி செய்து, இந்த வருத்தம் பொருந்திய விஷயங்களைப் பிடிக்கச் சக்தி பெறுவோமானால், நாம் இவைகளை உடைத்துத் தள்ளி நம் மிஷ்டம்போல் மறுபடியும் செய்யமாட்டோமா?

ஆ! தேய்வற்ற என் காதற் களஞ்சிய சந்திரனே! வானத்துச் சந்திரன் மறுபடியும் எழுகிறான். இனிமேல், எத்தனைமுறை அவன் எழுந்து இந்தத் தோட்டத்தில் என்னைத் தேடுவான்?—வியர்த்தம், வியர்த்தம்!

நீ, உன் அழகிய பாதங்களோடு, விருந்தினர்கள் அங்கங்கே வீற்றிருக்க இப்பக்கம், என்னை யடக்கம் செய்திருக்கும் இடத்திற்கு வந்தாயானால்—ஒரு லோடா சாராயங் குடித்துவிட்டு அப்பாத்திரத்தை என் கல்லறையின் மேல் கவிழ்த்து விடு!

## குறிப்புகள்.

(1) ஒட்டகங்களைக் கிளப்ப வழி, ஒட்டகங்கள் தம்மீது சுமை யதிகமென்று நினைத்துப் படுத்துக்கொண்டே யிருக்குமாம். அப்போது ஒரு சிறு கல்லை முதல் ஒட்டகத்தின்முன் எறிந்துவிட்டால் தன் பார மிரங்கினாற்போல் அது ஓட மற்றவையும் ஓடுமாம்!

(2) ஈராம் என்பது ஷீடாட் என்னும் அரசனால் ஏற்பட்டு அரேபியா மத்தியில் மறைந்திருக்கிறதாகச் சொல்லப்படுகிறது. ஜாம்ஷிட் என்பவன் ஒரு மகத்தான வீரன். அவன் கோப்பை மாயக் கோப்பையாம்.

(3) தாவீது:—கிறிஸ்து வேத புத்தகத்திலிருந்து இவன் பெரிய அரசனெனத் தெரிய வருகிறது.

(4) & (5) கைகோபாட், கைகோஷ்ரூ பெரிய பட்டணங்கள்.

(6) ரஸ்டம்—பாரசீக ஹர்குலீஸ். பெரிய வீரன்.

(7) ஹதீம்டாய்—பாரசீக கர்ணன்.

(8) சுல்தான் மாமூது—இந்தியாமீது படை யெடுத்து சோமநாத்தைப் பேர்த்தவன்.

(9) பாஹ்ராம்—ஒரு பெரிய அரசன், வேட்டையில் பெயர் பெற்றவன். இவனுக்கு ஏழு அரண்மனைகளாம். ஒவ்வொன்றும் ஒவ்வொரு வர்ணத்துடனிருந்ததாம். ஒவ்வொன்றில் ஒரு மனைவி வைத்திருந்தானாம்.

(10) உலகத்தின் ஆயுள்:—இது ஒரு சாராருடைய கொள்கை.

(11) மியூஸின்:—மசூதிகளில் ஜெபத்திற்கு அழைப்பவன்.

(12) சனி:—படிப்பின் அக்கரை கண்டவனெனக் கொள்கை.






# மதகுருவுடன் போராடிய ஹென்ரி II

(T. S. ராஜகோபாலன், *B. A. L. T.*)

ஹென்ரி I எவ்வளவோ பணிவுடன் கேட்டுக் கொண்டும், பரப்பாம்புகளா யிருந்த சில நார்மனிய பிரபுக்கள் பெண்ணாலாளப்பட விரும்பாதவர்களானார்கள். ஆகவே வெற்றி வீர வில்லியமின் மகள் வழி மைந்தன் ஸ்டீபன் என்ற ஒருவனை அரசனாக்கிக் கொள்ள விரும்பினார்கள். ஆயினும் சிலர் அரசன் மகளை விசுவாசத்துடன் ஏற்றுக் கொண்டு ஆதரவு செய்தனர். இரு கக்ஷிகளிலும் சேராத தான்தோன்றி தடியர்கள் நரி நாட்டாண்மை நடத்தலானார்கள். "நரிக்குக் கொண்டாட்டம் நண்டுக்குத் திண்டாட்டம்" என்றதைப்போல், பாமர ஏழை மக்கள் பாடு பாதவிக்கும் நிலையாயிற்று.

நாட்டில் எங்கும் கக்ஷிச் சண்டைகளும், எதிர் கக்ஷியினரைத் தாக்குதலும், கொள்ளைகளும், கொலைகளும் அபரிமிதமாயின. சமாதானம் கிடையாது. பத்திரம் கிடையாது. நிம்மதி கிடையாது. ஒவ்வொரு பிரபுவுக்கும் ஒவ்வொரு கோட்டை யிருந்தது. அந்தப் பல கோட்டைகளும், பல காராக் கிரகங்களே. தங்கள் வழிவாராதவர்களை இம்சிக்கும் நரகங்களாக இருந்தன. உதாரணமாகத் தங்களிடமுள்ள சொத்துக்களைக் கொடுக்காதவர்களை முள்ளுப் பீப்பாய்களில் தள்ளி உருட்டினார்கள். பாம்பும் தேளும், நட்டுவாக்கலிகளும் போன்ற கொடிய விஷ ஜந்துக்கள் நிறைந்த குழிகளில் தள்ளினார்கள். தலை கீழாகக் கட்டித் தொங்கவிட்டு நெருப்பைப் போட்டுக் கொளுத்தினார்கள். முடிச்சுகள் போட்ட மணிக்கயிறுகளை தலையில் கட்டி இறுக்கினார்கள். ஆட்களை மூக்கிலோ, காதிலோ, உள்ளங்கையிலோ, கால்கட்டைவிரலிலோ கொக்கியைக் கோத்து உயரக் கட்டித் தொங்கவிட்டார்கள். இயேசுகிறிஸ்துவும் அவருடைய தூதர்களும் தூங்கினார்களோ என்றும் நினைக்கவேண்டியிருந்தது. அந்தப் பதினெட்டு வருடங்களும் பதினெட்டு நீண்ட மாரிகாலமாகத் தோன்றியது" என்றவாறு சரித்திராசிரியர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்.

மெட்டில்டாவின் சார்பாக ஸ்காட்லாந்து அரசரும் படையெடுத்து வந்தார். யுத்தம் நீடித்து நடந்து கடைசியில், ஸ்டீபன் உயிருள்ள வரையில் ஆளுவது என்றும், பிறகு மெடில்டாவின் மகன் ஹென்ரி ராஜ்யத்தை யடைவது என்றும் சமாதானம் நடந்து, அந்த வாலிங்போர்டு சமாதானத்தின்படி பட்டம் பெற்றவன் ஹென்ரி II.

ஹென்ரி II பட்டத்திற்கு வந்ததும் தன் தாய்க்கு இடையூறு செய்து நாட்டைப் பாழாக்கியது பிரபுக்களும் அவர்களுடைய பலமும்தான் என்று அறிந்து, தான் வந்ததும் பிரபுக்களின் கோட்டைகளை யெல்லாம் இடித்துத் தள்ளி நாசமாக்கினார். பிரபுக்களில் ஒவ்வொருவரும் குறிப்பிட்ட யுத்த வீரர்

களுக்கு மேல் வைத்துக் கொள்ளலாகாதென கண்டிப்பாய் உத்தரவு போட்டார். தன் பாட்டனர் ஹென்ரி I ஏற்பாடு செய்திருந்த "மூகாம் நீதிபதிகள் முறை"யை விஸ்தரித்து பிரபுக்களின் கொட்டங்களைப் பூராவாகவும் அடக்கினர். தம்முடைய கலியாணத்தின் மூலமும், மகனுடைய கல்யாணத்தின் மூலமும் தனக்கு ஸ்வபாவமாக பிரான்ஸில் உள்ள ராஜயங்களைப் பெருக்கியும் ஏதேஷ்டமான சாம்ராஜ்யத்தைச் சேர்த்துக் கொண்டு பிரான்ஸின் பாதிக்கு மேலும் இங்கிலாந்து பூராவுக்கும், அயர்லந்துக்கும் அரசராகி, ஸ்காட்லந்து தேசத்தரசனுடன் யுத்தம் செய்து கப்பங்கட்ட ஏற்பாடு செய்து, தம் பலத்தைக் கெட்டிப்படுத்திக் கொண்டார். குற்ற விசாரணையில் தெய்வ பல சோதனையை ஒழித்து ஜூரி விசாரணை முறையை ஸ்தாபித்தார். தெய்வபலச் சோதனை முறையாவது ஆங்கிலத்தில் (Trail by ordeal) என்பது. அது நமது நாட்டில் பேச்சு வழக்க முறையில் இருப்பது இந்நாளிலும் கேள்விப் படலாம். உதாரணமாக "காய்ச்சின எண்ணெயில் கையைவிட்டு நீ ருசுப் படுத்துவாயா" என்று கேட்கும் வழக்கமே. அங்கே குற்றவாளியல்ல என்று ருசுப்படுத்திக் கொள்ள தமிழ் பழமொழியில் சொன்னது போன்ற பல ஆபத்தான சோதனையி லிறங்கி வெளிவர வேண்டும் என்று இங்கிலாந்திலும் இருந்தது.

இம்மாதிரி யெல்லாம் செய்து "நியாயம் வழங்குவதில் சிங்கம்" ("The Lion of Justice") என்ற சிறப்புப் பெயர்பெற்ற அவருக்கு ஒரு பெரிய விஷயத்தில் ஜெயம் கிடைக்காது போயிற்று. அது விஷயம் பின்வருமாறு:—

நார்மனிய வில்லியம் காலத்தில் மத குருக்களின் பரிசுத்த தன்மையை ஒட்டியும், அவர்களுடைய பாரமார்த்திக ஸாத்வீக போக்கை அனுசரித்தும், அவர்களில் ஏதேனும் குற்றம் செய்தவர்களிருந்தால், அவர்களுக்குள்ளேயே ஒரு மதகுரு தலைவர், அக் குற்றவாளிகளை விசாரித்து லேசான தண்டனை விதித்துவிடலாம் என்று ஒரு உரிமை மத குருக்கள்களுக்கு கொடுத்திருந்தான் அரசன். பொதுவாக மத குருக்கள்களை கௌரவிக்க வேண்டியும், அவர்கள் கேவலமான இழி குற்றங்கள் செய்யமாட்டார்கள் என்ற ஒரு நம்பிக்கையின் மேலும் அவ்வாறு சிறிய குற்றங்கள் செய்பவர்களை லௌகிக நியாயாதிபதிகளிடம் வரவழைத்து உபத்திரவிக்க வேண்டிய அவசியமில்லை என்பதை விசேஷமாக மனதில் வைத்திருந்தான் அரசன். இந்த முறைச் சட்ட அமைப்பிற்கு "மதத் தலைவர் சட்டம் (Canon law) எனவும், பொது ஜனங்களுடைய குற்ற விசாரணை மதத் திட்டத்திற்கு பொது ஜன சட்டம் (Common law) எனவும் வரையறுக்கப்பட்டிருந்தது.

ஆனல் நாளடைவில் மதத் தலைவர்கள் யார்? பொது ஜனங்கள் யார்? என்று அறிந்து கொள்வது அசாத்தியமாகிவிட்டது. பொதுச் சட்டத்தின்படி எந்தச் சிறிய குற்றமானபோதிலும் தண்டனை கடுமையாக விதிக்கப்பட்டது. மதத் திட்டத்தின்படி தண்டனை, சிலநாள் உபவாசம், அல்லது மெழுகு வர்த்தி கொளுத்தி வைத்துவிடவேண்டியது போன்ற சொற்ப தண்டனைகள் தாம். ஆகவே கடுங்குற்றம் செய்தவர்களுங்கூட நாளா வட்டத்தில், தங்களை மத சம்பந்தப்பட்டவர்கள் என்று அழைத்துக்கொள்ள வாரம்பித்து, அதற்கடையாளமாகத் தங்கள் உச்சந் தலையில் அரையணு அளவு க்ஷவரஞ் செய்து கொண்டுவிட்டார்கள். இப்படிச் செய்து கொள்வதற்கு ஆங்கிலத்தில் "டான்ஷர்" (Tonsure) செய்து கொள்ளுவது எனச் சொல்லப்படும்.

(கத்தோலிக் மத குருமார்கள் தலைகளில் இம்மாதிரியான டான்ஷர் அடையாளங்களை இப்போதும் காணலாம்.) ஆகக் குற்றஞ் செய்வோர் தொகை நாளுக்கு நாள் அதிகரிக்கலாகி, தண்டனை யடைவது கஷ்டமாக இருந்து வரத் தொடங்கியது. மத சம்மந்தப்பட்டவர்கள் என்பதற்கு மாதாகோவிலோ மடாலயமோ எதனுடனாவது எவ்வளவு அற்ப சம்பந்தம் (உதாரணமாக மாடு மேய்ப்பதோ அல்லது புல்வெட்டிப் போடுவதோ) இருந்தாலும் போதும். அவர்களுக்கெல்லாம் ஆதரவு கிடைத்து வந்தது. இது ஹென்ரி II ன் மனதை மிகவும் புண்படுத்தியது.

தான் "நியாயம் வழங்குவதில் சிங்கம்," என இருந்து கொண்டு இந்த அக்கிரமத்தை அழித்துவிட வேண்டும் என்று துணிந்தான் அரசன். ஆகவே தன் பாலிய ஸ்நேகிதனும் விளையாட்டுத் தோழனுமான தாமஸ் பெக்கட் என்பவனை ஆயத்தப்படுத்தி காண்டர்பரி மதகுருவாக ஆக்கினான். தன் எண்ணம் பலித்துவிடுமென மனப்பால் குடித்தான்! நாட்டிலிருந்த அநீதி ஒழிந்துவிடுமெனப் பூரித்தான்! ஆனால் பாவம் அரசன் ஏமாந்து போனான். வெளியிலிருந்த வரையில் "ஆமாம்" போட்ட பெக்கட் மதகுரு-அதிலும் இங்கிலாந்து பூராவுக்கும் பிரதானமான காண்டர்பரி மதகுரு ஆனதும் மனம் மாறிவிட்டான். அந்த ஸ்தாபனத்துடனேயே ஐக்கியப்பட்டுவிட்டான். மத குருமார்களின் வழிப்படி அவர்களுடைய உரிமைகளைக் கேவலம் மண்ணரசனுக்கு விட்டுக் கொடுப்பதா என்று எண்ணங் கொண்டான்.

ஆகவே அரசன் எவ்வளவோ மன்றாடினான். கோபித்தான். வாதித்தான். வணங்கிக் கேட்டான். முதலில் மத குருதானா அல்லது துளியேனும் மத ஸ்தாபன சம்பந்தம் உண்டா என்றாவது பரிசீலனை செய்யலாம். பிறகு உண்மையில் மதகுருவல்லாதவர்களெனத் தெரிந்தவர்களையாவது பொதுச் சட்ட நீதி ஸ்தலம் விசாரிக்க அனுமதிக்க வேண்டும் என்றான். ஒன்றும் பயன்படவில்லை. பெக்கட் விடாப்பிடியாய் "அந்தப் பிரச்சினையை கனவிலும் கருதமாட்டேன்" என்று பதிலிறுத்துவிட்டான். அரசன் கோபங் கொண்டு தேசப் பிரஷ்டம் செய்து விரட்டிவிட்டான் பெக்கட்டை!

பின்பு கொஞ்ச காலங் கழித்து மறுபடியும் வரவிட்டு பூர்வ ஸ்தானத்திலிருத்தினான். தான் இல்லாத காலத்தில் யுவராஜ பட்டாபிஷேகம் நடத்தி வைத்த யார்க் ஆர்ச் பிஷப்பைத் தண்டிக்கத் தொடங்கியதை நார்மண்டியிலிருந்த அரசன் கேள்வியுற்றான். "ஐயோ இந்த மதம்பிடித்த பெக்கட்டிடமிருந்து என்னை விடுவிப்பதற்கு, என் உப்பைத் தின்னும் கோழைகளில் ஒருவரும் இல்லையா?" என அலறினான். இதைக் கேட்ட நான்கு வீரர்கள் இங்கிலந்துக்குக் கடுகிச் சென்று உபதேச மேடையில் நின்று கொண்டிருந்த பெக்கட்டைத் தேடி "ராஜத் துரோகி எங்கே" என்னவும் "கடவுள் தாஸன் நான்" என்ற பெக்கட்டை வெட்டி வீழ்த்தினர். இங்கிலாந்து—கிறிஸ்தவ உலகம் பூராவும் திடுக்கிட்டது. அரசனை சபித்தது! பாவி என்றது. தன் கோபத்திற்கு மனங்கசிந்த அரசன், பெக்கட்டின் சமாதியினருகில் மண்டியிட்டுப் பிராயச்சித்தத்திற்கு அறிகுறியாக இரண்டு மத குருக்களிடமிருந்து வெள்ளிப் பிரம்படியும் பெற்றான். ஆக விஷயம் கோபத்தில் முடிந்ததுதான் நல்லெண்ணத்திற்குக் கடவுளின் திருவுளம் போலும்! அதை யாரறிவார்?

ஆங்கிலேயர்கள் தங்கள் போக்கிரி அரசனைப் பயமுறுத்திப் பெரியதொரு உரிமைப் பத்திரம் பெற்ற கதை அடுத்தாற்போல் எழுதப்படும்.

# தமிழ் மாணவர் கடமை.

(ஒரு மாணவர்.)

அமிழ்தினு மினிய தமிழன்னையின் அருந்தவப் புதல்வர்களாகிய நண்பர்களே! அனைவரும் ஒன்றியிருந்து சிந்தியுங்கள். தற்காலத் தமிழுலகில் மாணவ நிலைமையிலுள்ள நாம் நம்மைப் பேணவும், நம்முடைய நாட்டைப்பேணவும், நமது மொழியைப்பேணவும் கடமைப்பட்டவர்களாக விருக்கிறோம். ஏனெனின் இவ்வமயம் நமது நாடும் மொழியும் பொலிவிழந்து காணப்படுகின்றன. பண்டைக்காலத்தே நம் நாடு எவ்வாறிருந்ததென்பதை யாராய்ந்த பின்னர் நாம் செய்யவேண்டிய கடமைகளைக் கூறுவன்.

2. பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்னரே நம்முடைய தமிழ்நாடு தலைசிறந்து விளங்கியதென்பது பேரறிஞர்களின் கொள்கை. உலகிலுள்ள எந்த நாடும் எந்த மொழியும் நமது தாய்நாட்டிற்கும் தமிழ்மொழிக்கும் இணையுடையன அல்ல வென்று கூறும் வண்ணம் பண்டைக்காலத்தே வீறு பெற்று விளங்கிய தெனத் தோற்றுகின்றது. முற்காலத்தே "ஓரைவரீரைம்பதின்ம-ருடன்றெழுந்த-போரிற் பெருஞ்சோறு போற்றாது தான் கொடுத்து" நமது தமிழ்ப்பெரு வேந்தர்கள் தனியரசாட்சி நேரிய முறையில் நடாத்தி வந்ததையும், சேரன் செங்குட்டுவனென்பான் இமயத்தின் பிடரியில் விற்குறி பொறித்துத் தன்னையிகழ்ந்த கனக விசயர்களாகிய ஆரிய மன்னர்களின் முடித்தலை நெரிய நமது கற்புக்கரசியாம் பத்தினிக்கடவுளின் படிமத்தைச் சுமத்தி வந்ததையும், நாவாயேறி முந்நீர் கடந்து பகைவரையழித்துப் பண்புடன் வாழ்ந்த திறனையும், மயிற்றோகை முதலியனவற்றைப் பிறநாட்டினர்க்குமுதவி வாணிபம் புரிந்த வன்மையினையும், அரசனதவைக் களத்தேறி அவன் தவற்றை அஞ்சாது இடித்துரைத்துத் தன் ஆற்றல் விளங்க மதுரைமாநகரை அங்கியங்கடவுட்கு அறமுறை கோடாது அரியூட்டிச்சென்ற கண்ணகிக் கடவுளின் வீரத்தையும், அன்னோளின் அறவுரை கேட்ட ஞான்றே படிமிசை வீழ்ந்து ஆவியைப் போக்கிக் கொடுங்கோல் நிமிர்த்திய பாண்டியனது செங்கோற்றிறனையும், தலையன்புகாட்டித் தன்னுயிர் நீத்த கோப்பெருந் தேவியின் அறக்கற்பினையும், அறவணவடிகளினடியிணை மறவாத்துறவினைக் கொண்ட மணிமேகலையின் மாண்பினையும், அதியமான்பாலருங்கனி பெற்றும் மலையமான்பாற்றூதிற்கேகியும் அரசியல் முதலிய துறைகளில் தமிழ்நாட்டு வீரமகளிருக்கிருந்த போராற்றலை

"இவ்வே பீலியணிந்து மாலை சூட்டி

என்ற பாடலால் வெள்ளிடை மலையிற்றெள்ளிதிற்காட்டிய ஒளவைப்பிராட்டியினருந்திறனையும், கற்றோரேயன்றி மற்றோரும் கனிந்துருகுமாறு கவின் பெற்றிலங்கும் கன்னித் தண்டமிழால் இயற்கையழகும் இன்ப ஒழுக்கமும் நீதிமுறையும் மலிந்து மிளிர பாக்கள் யாத்தும் தங்கள் "ஆடெரி படர்ந்த கோடுயரடுப்பிலாம்பி பூத்த" ஞான்றும், வறுமுலை சுவைத்துக் குழவி தாய்முகம் நோக்க மனைவி தம்முக நோக்கிய ஞான்றும் பெரு நில மன்னரே யெனினும் தம்மை மதியாதவரிடம் பரிசில்பெற விழையாது அன்னோரைத் துரும்பென

மதித்து நாட்பல கழியினும் அறமுறை கோடாத அரசர் வள்ளல் முதலி யோர்பாற்சென்று அமிழ்தன்ன தமிழ்ச்சுவையினை அன்னோர் செவிமடுத் துண்ண ஊட்டி அவர்களின்புற்றளிக்க அன்புற்றுக்கொண்ட நல்லிசைப்புல வர்களின் நல்லற வாழ்க்கையினையும், "யாதும் ஊரே யாவருங்கேளிர், தமிழ ரனைவருந் தமிழ்த்தாய் மைந்தர் எம்மதமாயினும் எக்குலமாயினும்—எங்கள் தமிழர் எங்கள் தமிழர்" எனக்கொண்டு, இணைபிரியாது நாட்டிற்கும் மொழிக் கும் நலம்புரிந்து வந்த சைவ அருக புத்த சமயங்களைக்கொண்ட செங்குட்டு வன் இளங்கோ சாத்தனார் முதலியோரின் ஒற்றுமையினையும், அக்காலத்தே மன்னர்களும் வள்ளல்களும், தங்கள் பாலுள்ள பொருட்செல்வங்களை வரை யாது கொடுத்து புலவர்களிடத்துள்ள கல்விச் செல்வத்தை நாட்டில் வளம் பெறச்செய்த வன்மையினையும், எந்நாட்டினருங் கொண்டிராத வண்ணம் தாங்கள் செய்கின்ற செயல்களிலெல்லாம் கடவுள் வழிபாட்டைத் திறம்படக் கொண்டு சீர்பெற்றோங்கிய தமிழ் மக்களின் கடவுளுணர்ச்சியையும், ஓவியம்—நிமித்தம்—மருத்துவம் முதலிய கைத்தொழில்களில் பண்டைத் தமிழ் நாட் டார்க்கிணையின்றென இன்றும் பிறநாட்டார் வியப்புறுகின்ற செய்தியினையும் கேட்டுணர்ந்து வருகின்ற தமிழ் மாணவர்களாகிய நாம் நம்முடைய தாய்நாட் டினையும் தமிழ் மொழியினையும் எங்ஙனம் காணுகின்றோம் பாருங்கள்.

3. இமய முதற் கன்னியீறாக உள்ள இந்நிலப்பரப்பினையே யன்றிக் கடலைக்கடந்துந் தங்கள் ஆற்றலைக்காண்பித்து வந்த நாடு தனக்கென ஓர் பற்றுக்கோடின்றித் தவிக்கின்றது. தற்காலத்திற் றலைசிறந்து விளங்கும் மொழிகளெல்லாம் எழுத்து வடிவங்கொள்ளுதற்கு முன்னரே தமிழ்மொழி பல துறைகளினும் வீறுபெற்றிருந்ததென அறிஞர்களால் புகழப்பட்ட மொழி அரசியல் முதலிய எவ்வகையினும் ஆதரவற்றதுமன்றித் தமிழ் மக்களாலும் புறக்கணிக்கத்தக்க நிலைமைக்கு வந்துவிட்டது. நாட்டிற்கும் மொழிக்கும் நலம்புரிவதே நமது கடமையென்று கொண்ட பல புலவர்கள் வாழ்ந்து வந்த நம் தமிழ் நாட்டில் பிறர்க்கெனவும் வாழுகின்ற இரண்டொரு புலவர்களைக் கூடக் காண முடியவில்லை. ஐந்திலக்கணங்களையுந் தனக்குச் சிறந்த அணிக லனாகக்கொண்டு மிளிர்ந்த நந்தமிழன்னையின் வனப்பை மக்கள் உள்ளத்தைக் கெடுத்து தீ நெறிக்கட் செலுத்துகின்ற பொருளற்ற சில போலிக்கதைகளா கிய மாசுகள் படிந்து மறைத்து வருகின்றன. போரின்கண் தன்மைந்தன் புறங்காட்டி வீழ்ந்தானென்ற சொல் செவிப்படுமுன்னர் கடுஞ்சினம் பூண்டு கைவாள் கொண்டு அன்னோற்குப் பாலூட்டிய கொங்கையை யறுக்கத்து ணிந்தவள், விரைந்து போர்க்களம் புகுந்து தன் மைந்தன் மார்பில் அம்பு தைத்து மாண்டிருக்கக்கண்டு மனமகிழ்வு பூண்டு 'என்கணவன் களத்திற்பட் டான் கிளையனைத்தும் முன்னின்று ஒழிந்தன. கையானது பின்னின்று கணையுந்த அம்புபோற் பாய்ந்தான் என் ஏறு" என்று தன் உள்ளத்தின் வீர வுணர்ச்சியை ஓவியம்போற் காட்டிய வீர மகளிரும், மங்கையர்க்கரசி முத லிய கற்புடைப் பெண்டிர்களும் வாழ்ந்துவந்த நந்தமிழ் நாட்டில் இற்றை நாளில் ஜப்பானிய நாட்டிலுள்ள பெண்கள் நம் நாட்டுப் பொருள்களைக் கொள்ளைகொள்ளப் பல நிறங்களோடு வனைந்தனுப்புகின்ற சிறிய பட்டாசு வெடியினைக் கேட்பினும் நடு நடுங்குகின்றவர்களையும், முன்னேற்றத்தில் விழைவுகொண்ட தற்காலத்திய நமது சகோதரிகளிற் சிலர் மக்கட் பிறவியில் கொள்ளத்தகாத சில ஆடவர்கள் செய்யுந் தீயொழுக்கத்தைக்கொண்டு அன் னோர்களையும் தங்கள் நல்லொழுக்கத்தால் இடித்துரைத்து நன்னெறிப்படுத்

தும் ஆற்றலிருந்தும் தன் கைக்கண் இன் கனியிருந்தும் அவற்றின் சுவையைத் தானும் நுகர்ந்து பிறரையும் நுகரச்செய்வதை விடுத்து, இன்னாதகாய் தேடித் தானும் மகிழ்ந்து பிறரையும் மகிழ்விக்க விழையும் பித்தரைப்போலவும், தன்னைத் தூய்மைப்படுத்த எண்ணி சேற்றிற்புரண்டு மீண்டுவரும் பேதையைப் போலவும், முன்னேற்றத்தில் ஆர்வங்கொண்டு அவர்கள்பாலுள்ள தீ நெறியிற் சமவுரிமை கேட்பவர்களையும் காணும்படி நேர்ந்ததே! இவர்கள் என்று நமது அருந்தமிழிலுள்ள பொருந்தாக் கதைகளைப் புறம்பென்று தீய்க்கிட்டு முன்னேற்றத்திற்காவனவற்றைப் பயின்று பண்டை வீரத்தாய்மாராக விளங்குவார்கள்.

4. ஒன்றே குலமும் ஒருவனே தெய்வம் என்ற செந்நெறியினைக்கொண்ட நமது தமிழருக்குள் இக்காலத்துள்ள பிளவுகளைக் கணக்கிட இயலுமா? சமயப்போரிடுவோரினும் நாத்திகர் நனிநல்லர் என எடுத்துக்காட்டிய ஓர் தமிழறிஞரின் கருத்து ஈண்டு நினைவிற்கு வருகின்றது. உறக்கத்தினுங்கூட கடவுள் வழிபாட்டைக் கையாண்டுவந்த நம் நாட்டில் அதனையடியோடொழிக்க வேண்டுமென்று ஓர் புயற்காற்றுத் தோன்றித் தன் வீறு குறைத்துவருகின்றது. பலவகையான கைத்தொழில்கள் மலிந்து செல்வம் பெருகிய செந்தமிழ்நாடு இன்று தன் மானத்தைக் காக்கும் ஆடைக்குக்கூட அந்நிய நாட்டை நோக்குகின்றதே. மாணவ நண்பர்களே! நம் நாட்டின் பண்டைச் சிறப்பினையும் இக்காலத்திய இழிதகைமையையும் இவ்வாறு கண்டுங் கேட்டும் அனுபவித்தும் வருகின்ற நம்முடைய உள்ளம் கொதிக்காதிருக்க முடியுமா? தற்காலத்தில் முன்னேற்றமடைந்துள்ள நாடுகளெல்லாம் மாணவர்களாலேயே முன்னேறியதென்பதை யுணர்ந்த நாம் நம்முடைய நாட்டையும் முன்னேறச்செய்யும் பொறுப்பு வாய்ந்தவர்களென்பதை மறந்துவிட முடியுமா? நண்பர்காள் நம் நாட்டினிடத்துப் பற்றுதல் கொண்டுள்ள நம்மை இனி எவருந் தடுக்கவல்லாரல்லரென்பதை உள்ளத்திற் கொண்டு நமது உடன்பிறந்தார்களை அறைகூவி யழையுங்கள். என்று நமது தோழர்கள் ஒன்றுபடுவார்களோ அன்றே நம் நாடு ஏனைய நாடுகளினும் தலைசிறந்து விளங்குமென்பதை யுள்ளத்திற்கொள்ளுங்கள். நமது தமிழன்னையின் மாசுகளை நீக்கிப் பொலியச்செய்வோமென்றுண்மை கூறுங்கள். தளரா நோக்கத்துடன் தொண்டு புரிவதே நம் கடமையென்று ஒவ்வொரு தமிழ் மாணவரும் முன்வந்து விடுவோமாயின் பயன் தானே விளையுமென்பதிற் சிறிதும் ஐயமுளதோ?

**மாணவர் கடமை**

5. நமது தமிழ் நாடு முன்னேற்றமடைவதற்கு ஒவ்வொரு தமிழ் மாணவரும் தாய்மொழியினைச் செவ்வனே கற்றல் வேண்டும். கற்றற்குரியகாலம் இளமையென்பதை உள்ளத்திற்கொள்ளல் வேண்டும். அவ்வாறு கற்கின்ற காலத்தே உடலைமட்டும் பேணித் தங்கள் உரிமைகளையிழந்து அடிமையாகின்ற பாழும் உத்தியோகம் ஒன்றையே வேண்டிப் பயில்வதை யடியோடொழிக்க வேண்டும். கற்கின்ற காலத்தே பண்டைத் தமிழ் மக்களின் வீரத்தினையும் தற்காலத் தமிழ் நாட்டின் நடைமுறையினையும் பிறநாட்டாரின் சரித நிகழ்ச்சியினையும் ஒருவாறு உள்ளத்திற் கொண்டே பயிலுதல் வேண்டும். அடிமை வாழ்க்கையைத் தவிர்த்தால் தமிழ் கற்றார்க்கு வழியில்லையென்று பிறர் நம்மை எள்ளி நகையாடாவண்ணம் கைத்தொழிற் கல்விகளையும் கற்றல் வேண்டும், படிக்கின்ற காலத்தே இரவும் பகலும் ஓயாது படித்து மனதைக் கலக்கி விடுத்

தல் கூடாது. படிக்கின்ற காலத்தே காலைமாலைகளில் இயன்ற அளவு உடற் பயிற்சி செய்தல் வேண்டும். ஒழிந்த நேரங்களில் பிறமொழிகளிலியன்ற அளவு கருத்தைச் செலுத்துதல் வேண்டும். விடுமுறை நாட்களில் ஊர் தொறுஞ்சென்று தத்தமக்கு இயன்ற அளவு மக்களிடையே தமிழுணர்ச்சியை உண்டு பண்ணி ஆங்காங்குள்ள செல்வர்கள்பால் இளைஞர்கட்குத் தமிழ் மொழி யைக் கற்பித்தற்குப் பொருளுதவி செய்யுமாறு வேண்டுதல் வேண்டும். பொருளற்ற நாவல் முதலிய வெறுங்கதைகளில் மனத்தைச் செலுத்தாது புறம்பெனத்தள்ளுவதுடன் அத்தகைய செயல்களில் வீண் காலங்கழிக்கும் பெரியோர்களை மாணவர்களின் எதிர்கால வாழ்க்கையில் மனத்தைச் செலுத்து மாறு வேண்டுதல் வேண்டும். நமது தமிழ் நாட்டில் பொருள் பொதிந்து மிளிர்கின்ற பத்திரிகைகளைப் போற்றுவதுடன் அப்பத்திரிகைகளில் மாண வர் முன்னேற்றத்திற்கென ஒவ்வொரு கட்டுரை வரைதல் வேண்டும். தமிழ் மொழியுந்தமிழரும் முன்னேற்றமடையவேண்டுமென்றே கூட்டப்பட்ட நமது தமிழர் மகாநாட்டை ஆண்டுக்கொருமுறை கூட்டி நமது தமிழறிஞர்களைத் திரட்டித் தமிழருக்காவன செய்வதுடன் அம்மகாநாட்டைத் தமிழ்நாடனைத் திற்கும் தாயகமாகக்கொண்டு அவற்றின் கிளைகளாக நம் நாட்டிலுள்ள கழகங் களனைத்தையுமமைத்து அதினின்றுந் தமிழ் மொழியைச் சீரிய முறையில் வளர்க்குமாறு ஒவ்வொரு கழக உரிமையாளர்களையும் வேண்டிக்கொள்ளுதல் வேண்டும். நமது மகாநாட்டைத் தமிழர்களுக்கும் தமிழ் மொழிக்குந் தாயக மாக்க முயற்சி செய்யுமாறு ஒவ்வொரு தமிழ்ப்புலவர்களையும் வேண்டிக்கொள் ளுதல் வேண்டும். தமிழ் நாட்டின்கண் தமிழ் மக்களின் பொருளினுலும் உழைப்பினுலும் கட்டப்பட்ட சத்திரங்களைச் சோம்பேறிகளுக்கு உரிமையாக் காது நமது ஏழை மக்களின் கல்வி முன்னேற்றத்திற்குப் பயன் படுத்துமாறு அதன் நிர்வாகிகளை வற்புறுத்துவதுடன் தமிழருக்குத் தாயகமாகவுள்ள ஆல யங்களினும் மடங்களினும் மலிந்து கிடக்கும் செல்வங்களிற் சிறிதளவேனும் நமது கல்வி கைத்தொழில் முதலியவற்றிற்குப் பயன் படுத்துமாறு அவை கட்குரியவர்களைப் பணிந்து கேட்டுக்கொள்ளுதல் வேண்டும். பிறப்பினுல் நம்மைவிடத் தாழ்ந்தவர்களோ உயர்ந்தவர்களோ ஒருவரிருக்கின்றுரென்னும் போலி எண்ணம் நமது மாணவர்களைப்பற்றுது அடியோடொழித்து அன்பு ஒற்றுமை முதலிய அருங்குணங்களைக் கொண்டு நம் நாட்டை முன்னேறச் செய்தல் வேண்டும். நமது உடன்பிறந்தாராகிய பெண்மணிகளுக்குப் பண் டைக்காலத்திய தமிழ் மங்கையரின் கல்வி, கற்பு, வீரம் முதலியவற்றைத் தன் அகத்தே கொண்டுள்ள அரிய நூல்களைப் படிக்கச்செய்து அவர்களையும் வீரத் தாய்மார்களாக்குவிக்க முயற்சித்தல் வேண்டும். தமிழ் மொழியினை நன்கு உணர்ந்து ஏனைய மொழிகளினும் வன்மை பெற்றுள்ள நமது மூதறிஞர் களைக்கொண்டு பிறமொழிகளில் நம்மொழியிலில்லாத அருங்கருத்துக்கள் காணப்படின் அவற்றைத் தமிழில் மொழிபெயர்க்க முயற்சித்தல் வேண்டும். ஆலயங்களிற் காணப்படும் சில வெறுப்புச்செயல்களை வேரறக் களைந்துவிட்டு கிழமைக்கோர் முறையேனும் தமிழரனைவரும் ஆலயங்களிற்கூடி அரைக்கால் நாழிகையேனும் இறைவனை வழிபட்ட பின்னர், நமது முன்னேற்றத்திற் குரிய வழிகளைப் பற்றி விரிவுரையாற்றி அனைவரையும் ஒற்றுமைப்படுத்தல் வேண்டும்.

நண்பர்காள்! இத்தகைய செயல்களெல்லாம் நம்முடைய எதிர்கால வாழ்க்கைக்கு ஆக்கந்தருவதொன்றன்றே. சுயஆட்சி உரிமையில் வேட்கை

பெருகிவரும் நம்முடைய நாட்டிற்கு கல்வி கைத்தொழில் முதலியன அடிப்படையன்றே. இவ்வகையில் முனைந்து நின்று பணியாற்றுங்கடன் மாணவர்களுடையதன்றே. இத்தகைய சிறிய துறைகளில் மாணவர்களாகிய நாம் பணியாற்றுவதற்கு நமது தமிழாசிரியர்களின் பேருதவிகள் மிகவும் இன்றியமையாத தொன்றும். ஆனால் நமது தமிழ் ஆசிரியர்களிற் சிலர்,

'எங்கட்குப் பொருள் வருவாய் மிகக்குறைவாயிருக்கின்றதே நாங்கள் எவ்வாறு நுங்கட்குத் துணைபுரிய வல்லேம்' என்று இனிதாக மொழிந்து விடுகின்றார்கள். உண்மைதான். தங்கட்கு இவ்வமயம் வருகின்ற வருவாயினும் இன்னும் ஐந்து ரூபாய்களை மேலதிகாரிகள் பிடித்து விட்டுத் 'தமிழாசிரியர்களுக்கு இதற்குமேல் தொகை கொடுக்க முடியாது மிகுதியாக வேண்டுகின்ற தமிழாசிரியர்கள் எங்களுக்கு வேண்டாமென்று கூறிவிடுவார்களாயின் எத்தனை ஆசிரியர்கள் தங்கள் பதவிகளைத் துறக்க முன்வருவார்கள்? தமிழாசிரியர்கள் பொருள் வருவாயின் குறைவை முன்னிட்டுத் தமிழன்னைக்குத்தொண்டாற்ற விழையும் மாணவர்கட்குத் துணைபுரியப் பின்னிடுவாராயின் மாணவர்கள் என் செய்தல் கூடும்? தமிழாசிரியர்களின் வழித்தோன்றல்களாகிய நாம் அவர்களைவிட எந்த வகையில் சிறந்து மிளிர்கின்றோம். இல்லையே. என்செய்வது. வறுமையே யடைந்துள்ள ஒருவன் முன்னுக்கு வருவதும் இயல்பன்றே? நாம் இங்ஙனம் சொல்லிக்கொண்டே வாளாவிருப்பின் உயர்நிலையெய்தி விடுவோமா? பிறர் நகைப்பிற்காளாகி உடல்வலியுமன்றே குன்றிவிடும்? ஆதலின் நண்பர்களே! நமது புலவர்களையும் நமக்கு ஆவன செய்யுமாறு பணிந்து வேண்டி, பொருள் வளமுடைய தமிழ்ப்பெருஞ் செல்வர்கள்பாற் சென்று நம் நாட்டிற்கும் மொழிக்கும் உதவி செய்யுமாறு வேண்டுவோம். மாணவர்களாகிய நாம் இத்துறையிலிறங்குவோமாயின் எல்லோரும் நமது முன்னேற்றத்திற்கு உதவி புரிவார்களென்பதிற் சிறிதும் ஐயம் வேண்டாம். அதினும் உதவ முற்படாராயின் பட்டினிகிடந்து உயிர் துறந்தேனும் தமிழன்னைக்கு ஆக்கந்தேடுவோம். இன்றே எழுந்திருங்கள். தமிழன்னை வீறுபெற்றனளென்று தெருக்கடோறுந் தமிழ் முழக்கஞ்செய்யுங்கள். தமிழ்ப்புலவர்களையும், தமிழ்நாட்டு மடாதிபதிகளையும், ஆலய நிர்வாகிகளையும், தமிழ்ப்பெருஞ்செல்வர்களையும் தன்னைப்பேணுதற்குத் தமிழன்னை அறைகூவியழைக்கின்றாளென்று கூவுங்கள். அறியாமையாகிய தீண்டாமையையகற்றுங்கள். அன்பு சகோதரத்துவத்தைப் பரப்புங்கள். தமிழ் நாட்டை உறக்கத்தினின்றும் விழிக்கச்செய்யுங்கடன் மாணவர்களுடையதென்பதைக் கொள்ளுங்கள். மாணவரனைவரும் வீரத்தமிழ்த்தாயின் சேய்களாக வெளியில் வந்து உலாவுங்கள். வாழி தமிழ்மொழி—வாழி தமிழன்னை—வாழி தமிழகம் என்று வாழ்த்துங்கள்.

"செந்தமிழ் நாடென்னும் போதினிலே யின்பத்
தேன்வந்து பாயுது காதினிலே"

என்ற இனிய பாடலைக் கனிந்த குரலால் பாடுங்கள்.

"சன்னித் தண்டமிழர் கவின் பெற்றிலங்க
எண்ணி யனைவரும் இறைஞ்சிடுவோமே"

தமிழ்த்தாய் வாழ்க.

# மாதர் உலகம்



## பிராட்டியார்



(ஸ்ரீமதி. பண்டிதை-அசலாம்பிகை அம்மையார்.)

———:(o):———

(263-ம் பக்கத் தொடர்ச்சி.)

பிராட்டியார் அரக்கரைச் சிறப்பித்துக் கூறிய மொழிகேட்டு மனம் வேறாகியதைக் குறிப்பாலுணர்ந்த தசமுகன் அதனை மாற்றக் கருதித் தன்னை யொருவாறு திருத்திக் கொண்டவனாய்ப் பிராட்டியை நோக்கி வன்மையினையுடைய அவ்வரக்கர் தமது தன்மைகளை மாற்றிக் கொண்டால் அல்லது பிறர் என்ன செய்தல் கூடும் என விளம்பினான். கள்ளம் சிறிது முணராத பிராட்டியார், தருமமூர்த்தியாகிய காகுத்தன் இவ்வனத்தில் உறையும் கால முடிவுக்குள்ளாகவே வருக்கத்தோடும் அரக்கர் குலம் இறுதியடையும்; பின்பு உலகம் துயரின்றி இன்புறும் என்று அஞ்சாது விடை யிறுத்தனர்.

என்னதான் காரியசித்தி குறிக்கொண்டு வஞ்சன் பேச்சில் விட்டுக் கொடுத்தபோதிலும் மங்கையின் நேருக்கு நேராகப் பாயும் சுடுசரங்களை யொத்த வீரமொழிகளை ஜாதிமானத்தினாற் றாங்க முடியாதவனாகி அரக்கர்களை மீண்டும் சிறப்பிக்க முற்படுகின்றான். இவன் கொண்ட வேடத்திற்காகக்கூட ஒரு சிறிதும் தயவு காட்டிப் பிராட்டியார் தன் கொள்கையிற் பின் வாங்கவில்லை. இறுதியிற் றருமத்தைப் பாவம் வெல்லாதென்று கூறி எதிர்த்துரையாடினார். மேலும் நீர் பெருமையாக எடுத்துக் கூறிய பத்துத் தலைகளையுடைய அரக்கனைச் சிறை வைத்த ஆயிரம் புயங்களையுடைய கார்த்தவீரியனை இரண்டு தோள்களை யுடைய பரசுராமர் வென்ற வரலாறு நீர் அறியீர்போலும் என்றிகழ்ந்தும் கூறினார்.

இதனால் பிராட்டியாரின் அஞ்சாமையும் வேடம் கண்டு வழவழப்பாய்ப் பேசாமல் உண்மையை வெளியிடும் வீரத்தன்மையும் சரித்திர ஆராய்ச்சியின் மாண்பும் வெளிப்படுகின்றது. இராவணன் பிராட்டியாரால் இகழ்வாகவும் அலட்சியமாகவும் தான் கருதப்பட்டிருப்பதைக் காணத் தரியாதவனாய்க் கடும் கோபத்தின் வசப்படுகின்றான். கோபத்தின் வளர்ச்சி பொய்க் கோலத்தை மாய்த்தது. தனது உண்மைத் தோற்றம் வெளிப்பட்டது. இதனை நேரிற்

கண்ட பிராட்டியார் உயிர் கவரும் கூற்றுவனை எதிர்கண்டதுபோல் துணுக்கமும் துயரமும் கொண்டனர்.

இராவணன் கோபித்து "நீ சொன்ன சொற்களுக்காக உன்னைப் பிசைந்து தின்பேன். அவ்வாறு செய்யில் என் உயிரும் நீங்கும். அது கருதிப் பொறுத்தேன். அச்சம் தீர்தி. பதினன்கு உலகமும் உன் சீறடி வணங்கும்படியான செல்வத்துள் வாழவிரும்பு" எனத் தன் கருத்தை விளக்குகின்றான். தன் எதிர் நின்று பேசுபவன் அரக்கர் தலைவன், தேவரை யேவல் கொண்டு செருக்கியுள்ள இராவணன், என்று நன்குணர்ந்த நங்கை அத் தருணத்திலும் அஞ்சாமல் தனது இரு செவிகளையும் தனது மெல்லிய இரு கரங்களாலும் பொத்திக் கொண்டு வஞ்சனை அரக்க! தேவர்க்காகும் புனிதமான அவிர்ப்பாகத்தை இழிந்த நாய் விரும்பியதுபோல காகுத்தனுக்குரிய கற்புத் தெய்வமாகிய என்னை நோக்கி என்ன சொன்னாய்? எனக் கடுங் கோபத்துடன் கூறுகின்றார். கற்புக் கடவுளாகிய பிராட்டியார் தமது தனிமையை எண்ணினாரா? தமது மென்மை வாய்ந்த பெண்மைத் தன்மையைக் கருதினாரா? அல்லது எதிரில் நிற்பவன் திரிலோக கண்டகன் என்பதற்காவது கலங்கினாரா? இல்லை. இல்லை. உத்தமக் கற்புடைய மங்கையர்க்கு உயிர் ஒரு பெரிதாகத் தோன்றுமோ? சித்திரவதை செய்யப்பெறினும் உள்ளம் நெகிழ்ச்சியுறுமோ? பிறிதோரிடத்தில் பிராட்டியார் வாயிலாகக் கவிவேந்தர்,

"கல்லொடுந் தொடர்ந்த நெஞ்சம்
கற்பின்மேற் கண்டதுண்டோ?"

என்று கற்பின் கடினத் தன்மையை விளக்கியுள்ளார்.

இரக்கத்திற்குத் தாயகமாகிய மகளிர் உள்ளத்தில் கற்பென்னும் கடினமான ஒப்பற்ற ஓர்வகை யுணர்ச்சி கால் கொண்டிருப்பதை எவ்வுரைகளால் போற்றுவது. நெருப்பிலிருந்து நீர் எழுதல்போலக் கற்பென்னும் வன்மையிலிருந்து அன்பென்னும் மென்மை அரும்புகின்றது. தன்னுடலைப் பல கூறுகளாக்க முயன்ற தந்தையாகிய இரணியனைக் கண்டு அஞ்சி உயிர் வாழும் விருப்பத்தினால் பிரகலாதன் தன் கொள்கையை விடவில்லை. இவ்வாறே மனிதரை உணவாகக்கொள்ளும் மகாபாதகனாகிய வல்லரக்கன் தனது தனிமையில் எய்தி அடாமொழி கூறியது கேட்ட பிராட்டியார் எட்டுணையும் மறுத்துக் கூற அஞ்சினாரில்லை. கடவுள் பால் நாட்டும் பக்தியும் கணவன் பால் நாட்டும் கற்பும் ஒரே தன்மையின வென்பதை உணர்ந்தன்றோ மணிவாசகப் பெருந்தகை திருக்கோவையாரைத் தலைவன் தலைவி பாவனையாக இயற்றி வைத்தருளினர். நமது பெரியாராகிய காந்தியடிகள் காட்டும் உண்மைச் சத்தியாக்கிரகம் இதுவே யன்றோ? பிராட்டியாரின் சத்தியாக்கிரக உணர்ச்சிக்கு முன் அச்சம் தலைதூக்க வல்லதோ? "அஞ்சுவது யாதொன்றும் இல்லை" "அஞ்சவருவதும் இல்லை" என்று அருளிய பொன்மொழி தமிழ்நாட்டுச் சத்தியாக்கிரகியாகிய நம் திருநாவுக்கரசரால் பெறப்பட்ட தன்றோ? ஆதலின் பிராட்டியார் மனக்களத்தின் முன் அச்சமென்னும் பேயிருள் அழிந்து பட்டது. தவிர தகாத மொழிகளை ஒருவர் கூறுவாராயின் செவிகளை அம் மொழியோசையை ஏற்காவண்ணம் சேமம் செய்தலும் பெண்பாலார் பெரிதும் கைக்கொள்ளும் ஓர் அறத்துறையுமாகும். இது குறித்தே தனது "செவி

களைத் துளிர்க்கையாலே சிக்குறச் சேமம் செய்தாள்" எனக் கவியரசர் உணர்த்துகின்றார்.

மேலும் இவனைக்கடிந்து கூறுவதால் வெகுண்டு கொல்லத் துணி வான். இவ்வுடல் இறப்பதன்றிப் புகழ்மாயுமோ? புல்லின்மீது நீர்தங்கி நிற் பதுபோல் தோன்றி மறைதற் பாலதாகிய வாழ்வை விரும்பி உயர் குடிப் பிறப்பிற் கொவ்வாத தொன்றை ஏற்பாருண்டோ? என்று மனதைத் திடப் படுத்திக்கொள்கின்றார். இதனைப்

"புன்னுனை நீரினெய்தாய்ப் போதலே புரிந்து நின்ற
இன்னுயிர் இழத்தலஞ்சி இற்பிறப் பழிதலுண்டே"

என்னும் அடிகளாற் கவி எடுத்துக் காட்டுகின்றார்.

இவ்வாறு பெண்மை மறைந்து ஆண்மை திகழ்ந்து சுடர்விடும் அனற் கொழுந்துபோற் பொலிந்து வீரமங்கையாகிய பிராட்டியார் பின்னும் இரக்கமுற்று பாதகனை நோக்கி அனற்பொறிகளைக் கக்கிக்கொண்டு இடி போலும் இராமபாணம் உன்னை நோக்கி வரா முன்னம் உன் உயிர்க்கு உறு தியை நோக்குவாயாயின் ஓடி ஒளித்திடுதி என்றும் புகல்கின்றார். இராம பாணம் வில்லினின்றும் வெளிப்பட்ட பின்பு நீ ஓடினாலும் ஒளித்தாலும் அது உன்னைவிடக்கூடிய தன்று ஆதலின் அது புறப்படுமுன்னர் நீங்குதி என்று தமது நாயகனது வல்லமையில் தமக்குள்ள நிச்சயத்தையும் அறிவிக் கின்றார். காமத்தினால் கண்ணிழந்தவனாகிய கொடியவனுக்கு உண்மை புலப் படுமோ, இவைகளை யொன்றையும் பொருட்படுத்தாமல் இராமன் வருமுன் கொண் டகல்வதே அறிவுடைமையெனக் கருத்தித் தனக்கு பூர்வம் வேதவதியி னால் ஏற்பட்டுள்ள சாபத்தினை யெண்ணி அகிலாண்டங்கட்கும் அன்னை யாகிய கற்புக்கடவுளை மெய்தொடக் கூசி ஒரு யோசனை யகலமுள்ள பூமியை அகழ்ந்தெடுத்து விரைந்து தேரிலேற்றிச் சென்றகன்றனன்.

மண்வழி செல்லாமல் விண்வழி படர்ந்தனன். பிராட்டியார் கிராத கன் கண்ணியிற் சிக்கிய பார்ப்பெனப்பதறி ஆவி சோர்ந்து இறைவா, இளை யோய் எனக் கூவிக்கூவி அரற்றலாயினர். இரதத்திலிருந்தும் அவனது பழி படு செயலைக்கண்டு இகழ்ந்தும் வெறுத்தும் தம்மாலியன்ற மட்டில் தேரைச் செலுத்தாம விருக்கும்படி அறிவுறுத்துன்றார். இந்நிலையில் இடையே தம்மை மீட்கும் பொருட்டு வந்து அரக்கனை வழி மறித்து அருஞ்சமர் ஆற்றிய சடாயு வும் தரையில் விழக்கண்டபோது பிராட்டியார் மூதன் முதலாகத் தம் குற் றத்தை யுணர்ந்து உள்ளழிகின்றார். இதனை

"பின்னவன் உரையினை மறுத்துப் பேதையேன்
அன்னவன் தனைக்கடி தகற்றினேன் பொரு
மன்னவன் சிறையற மயங்கினேன்."

என்னும் உரைகளால் எடுத்துக் காட்டுகின்றார்.

இதுவுமன்றித் தமது செய்கையால் தம்மை யளித்த குடிக்கே இழி வெய்தியதென்று எண்ணி ஏக்கமெய்துகின்றார். இதனை,

"கற்பழியாமை யென்கடமையாயினும்
பொற்பழியாவலம் பொருந்தும் போர்வலான்
விற்பழியுண்டது வினையினேன் வந்த
இற்பழியுண்ட தென்றிரங்கி ஏங்கினாள்"

என்னும் செய்யுளால் உணர்த்துகின்றார் கவிவேந்தர். நாயகனால் நிறுவப் பட்ட காவலைத் தவிர்த்துத் தனிமைப்பாடெய்தி இத்தகைய பழிக்காளாயினாள் ஜனகி யென்னில் இப்பழி தம்மைப் பெற்ற குடிக்கன்றோ இழிவென்று பெரிதும் நாணுகின்றனர் பிராட்டியார். பிறந்த குடிக்குப் பழி விளைத்த தோடு நில்லாமல் ஒப்பில்லாத தமது நாயகன் தாங்கிய கோதண்டத்திற்கும் மாசுண்டாக்கியது தமது பிடிவாதத்தோடு கூடிய தடை கடந்த செய்கை என்பதை மிகமிக எண்ணித் தமது நல்லறிவு இவ்வாறு புல்லறிவாக மாறிய தற்கு வருந்தும் பான்மை ஈண்டு பிராட்டியாரின் உயரிய பெண்மை இயல் பிற்கு ஒளி தருவதாகும். தவறு செய்தல் மன்பதைக்கியல்பே. செய்த தவறினைப் பின்னர் தவறெனக் கண்டு வருந்துவதே பெரியோர் இயற்கை. தான் செய்தது தவறென வுணர்ந்தாலும் அதனை ஏற்கத் துணியாமல் நியாயமெனச் சாதிக்க முற்படுவது சிறியோர் செய்கையாகும்,

பெரியோர் தவறிழைக்க நேருவது விதியின் வன்மையால் என்பது அறிஞர் துணிபாகும். அதே குறிப்பினைப் பிராட்டியாரும் நினைவு கூர்ந்ததைக் கவி

"விதி, இன்னமும் எவ்வினை யியற்றுமோ?"

என்னும் தொடரினால் காட்டுகின்றார். எவராலும் தடுக்க முடியாத ஆற்றலை யுடைய இராவணனால் பிராட்டியார் விரைவிலேயே இலங்கையில் உள்ள அசோக வனமென்னும் அடர்ந்த காட்டில் சிறையாகி அரக்கியர் காவலுக் குள்ளாயினர்.

பின்னர் பிராட்டியாரைச் சுந்தரகாண்டத்தில் அநுமான் காட்சிப் படலத்தில்தான் காணப்பெறுகின்றோம். சுக்கிரீவனால் நாடவிட்ட வானரத் தலைவருள் தென்றிசை சென்ற சேனையில் அநுமார் முக்கிய புருஷராவார். அறிவாலும், திறலாலும் அனைவரிலும் மேம்பட்டவரான அநுமானிடமே இராமன் பிராட்டியாரின் அடையாளங்களைத் தனிமையில் வைத்து உணர்த் தியதாகத் தெரிகிறது. கல்லும் சுவரும் கண்டமாத்திரத்தில் கண்டுருகும் கவின்வாய்ந்த பிராட்டியாரை மனவமைதி கெடாமல் காணத் தகுதி வாய்ந்தவர் நித்திய பிரமசாரியாகிய அஞ்சனையின் குமாரனைத் தவிர வேறில்லையென் பதை இராமர் உணர்ந்தார். அத்தகைத் தூய்மைவாய்ந்த அநுமனிடமும் பலப்பல கூறிய இராமன் முடிவாகவும் சுருக்கமாகவும் இறுதியில்

"மங்கையர் இவளை யொப்பார் மற்றிலை யென்ன நின்ற
சங்கையில் உள்ளந்தானே சான்றெனக் கொண்டுதேர்தி"

எனக் கூறுகின்றார். அதாவது,

கலங்காத சித்த சுத்தியையுடைய உனது உள்ளம் எந்தப் பெண் வடிவினைக் கண்டு இவர்க்கிணை படைப்பிலேயே இல்லையென்று திட்டமாகக் கரு

துகிறதோ அந்தப் பெண் வடிவே சீதையென நிச்சயம் செய்துகொள்வாயாக என்பதே. பிராட்டிக்கு உவமிக்கக்கூடிய அழகிய அமைப்பெதுவும் உலகிலேயே இல்லாமையை அம்மொழி சாஸனம் செய்கின்றது.

அத்தகைய பிராட்டியாகிய அழகுத் தெய்வத்தினை அருந்தவ முடைமையினால் அநுமன் இலங்கைத் தீவில் காணும் பேறு பெறுகின்றான்.

ஐம்புலன்களை வென்றவனாதல்பற்றி அப்பேறு அநுமானுக்கு வாய்ந்ததென்பதில் ஐயமுண்டோ ?

அநுமான் காண்பதற்குமுன் பிராட்டியார் ஆண்டிருந்த தவ நிலையைக் கவிவேந்தர் தமது முழுப் புலமையும் விளங்க விளக்குகின்றார்.

தடித்த இடையினை யுடையவர்களும், இரக்கமென்பதை அறியாதவர்களுமாகிய கொடிய அரக்கியர்களின் நடுவில் பன்னாளாக மழையின் ஓர் சிறு திவலையைக்கூட வாய்க்கப் பெறாமல் வாடி வதங்கி, வற்றி உலர்ந்து கரும் பாறைகளின் இடையில் ஜீவசஞ்சீவியாகிய சிறந்த தெய்வ மூலிகை காணப்படுவதை ஒத்து விளங்கினதாக உவமிக்கின்றார்.

பிராட்டியாரின் சோகம் அரக்கனால் சிறை வைக்கப்பட்ட பிராட்டியாருக்கு உறக்கம் என்பதுமில்லை, விழிப் பென்பது மில்லை.

வெய்யிலில் வைக்கப்பட்ட விளக் கொளிபோல சோபை மறைந்த மேனி யுடையவரானார். கொடிய புலிக்கூட்டத்தின் நடுவில் அகப்பட்ட இளமானைப்போல் உள்ளழிந்து உணர்வு கலங்கி உயிர் நசையற்றவராகக் காணப்பட்டார்.

ஆடவர் பெண்மையை அவாவும் தோளினனாகிய தம தின்னுயிர்க் காதலனாகிய இராமனது வடிவம் மனக் கண்ணில் தோன்றும் தோறும் தோன்றும் தோறும் பெருகும் கண்ணீர்ப் பெருக்கினால் நனைந்தும் பிரிவுக்கனலால் வீசப்பெற்ற தமது திருமேனியின் வெப்பத்தால் உடனுக்குடன் உலர்ந்தும் உடுத்த மரவுரி ஒரு நிலையின்றி யிருந்தது.

தம்மை நாடித் தமது நாயகன் வரக்கூடும் என்கிற எண்ணத்தால் நாற்றிசைகளையும் சுற்றிச் சுற்றி நோக்கி நோக்கிப் பேதுறும் கண்களையும் உடைத்தா யிருந்தார்.

மகளிர் இயற்கைப்படி தமது நாயகனுக்கு வனத்தில் வந்தபிறகு உணவாக அமைந்த இலைக் கறிகளையும் கிழங்கு வகைகளையும் (தாமில்லாமையால்) எவர் பரிமாறுவார் என்றெண்ணிக் கரைந்தனர். விருந்தொருவர் மேவின் யாது செய்வார் என எண்ணி விம்முவார். நான் கொண்ட மனநோய்க்கு மருந்தும் உண்டோ? என்று மயங்குவார். தாம் வீற்றிருக்கும் இடத்தில் கரையான் எழுந்து மூடினாலும் உணராதவரா யிருந்தார்.

அழுதலும் விம்முதலும், காதலனை நினைந்து கைம்மலர் கூப்பித் தொழுதலும் ஏங்குதலும், இரங்குதலும் வெருவுதலும், வெதும்புதலும் துவண்டு விழுதலுமேயன்றி வேறு செயலற்றவராயினர்.

உயிராகிய ஆடை தரித்திருப்பதைமட்டில் உணர்ந்தார். மங்கள ஸ்நானம் செய்யாமையினால் மன்மதனால் செய்யப்பட்ட ஓர் அமுதப் பதுமை

புகையேறி மழுங்கியதை யொப்பத் தோன்றினார். முன்னறிவிற் சிறந்த இளையவனும் இலங்கையென்று கடலிடையுள்ள இந்நகரினை யுணர்ந்திலர் போலும் என்று ஏங்குவார்.

கழுகரசன் இறந்தமையால் அவர்கட்கு உணர்த்தக் கூடியவர்களும் இல்லை. ஆதலின் இப் பிறப்பில் எனக்கு விடுதலையும் இன்றெனெ நிராசை கொள்வார்.

அதுவுமின்றி முன்பின் எண்ணிப் பாராமல் காவலாக இருந்த இளவலைக் கடிந்து தீவினை வசப்பட்ட யான் கூறியதாகிய பாப மொழிகளைச் செவியுற்றதால் அறிவில்லாதவள் என வெறுத்து இகழ்ந்து விட்டாரோ இறைவன் என்று எண்ணி வாய் நீரும் உலர்ந்து ஆவி சோர்ந்து பதைப்பார். வேறொரு வகையால் அரக்கன் கொண்டகன்றானாதலின் அவர்கள் தின்று பசி தீர்ந்திருப்பர் என்று தேடும் முயற்சியும் ஒழிந்திருக்கலாம் என்றும் கருதினார்.

இவைகளல்லாமல் நகரத்திலிருந்து தாய்மாரும் தம்பிமாரும் ஒரு சமயம் வந்து நகரத்திற் கழைத்துச் சென்றனரோ? என்று பலப் பல விதங்களெல்லாம் எண்ணி இரங்கினார். காதூஷணாதியரை ஒரே நாழிகையில் விண்ணுலகிற் கனுப்பிய வீரத்தினையும் ஏழை வேடனிடம் காட்டிய உண்மை நட்பினையும் தந்தைக்கு பிதிர்ப்பலி உதவியபோது நடந்த நிகழ்ச்சிகளையும், தான் மரவுரியும் சடைமுடியும் கொண்டதற் கிரங்காமல் ஆருயிர்த் தம்பியாகிய பரதன் சடைமுடி கட்டியதைக் கண்டு துணுக்குற்றுத் துயருழந்ததையும் பிறபலவும் நினைந்து நினைந்து கலங்கிக் கலுழ்ந்தனர்.

பரசுராமரை வென்ற வெற்றியும், காகமாய் வந்து இன்னல் விளைத்த ஜயந்தன் என்னும் இந்திர குமாரனை அடர்த்த வென்றியையும், தாம் நேரிற் கண்ட விராத வதமாகியவைகளையும் தம் சிரசால் மதித்து வணங்கி அந்தகைய வள்ளலைப் பிரிய நேர்ந்த வல்வினைக்கு நைந்துருகி நின்றார் பிராட்டியார்.




# வாழ்க்கையின் துயரங்கள்



("கலாவதி.")



இல்லை. எனக்கு இந்தப் பெண்மீது காதல் இல்லை. ஒரு பெண்ணிடம் மனதைப் பறி கொடுத்தவன் இன்னொரு பெண்ணைக் காதலிப்பது இயலாத காரியம். நான் மிருநாளினி தேவியின் முகத்தைப் பார்ப்பதிலும், அவர் பேச்சைக் கேட்பதிலும் மகிழ்ச்சி அடைகிறேன் என்பது உண்மை. ஆனால், இதற்குக் காரணம் இலகுவில் கூறிவிடலாம். இது காதல் அல்ல. நட்பே ஆகும். வாசகர்கள் என்னைச் சந்தேகிக்கக் கூடும். நானே சந்தேகம் உற்றதுண்டு. ஆனால் நான் கண்ட முடிவு ஒன்றுதான். ஒரு பெண்ணிடம் மனதைப் பறிகொடுத்தவன் இன்னொரு பெண்ணைக் காதலிப்பது இயலாத காரியம்.

நான் ஒரு வைத்தியன். அந்தப் பெண்ணை நான் உத்தியோகமுறையில் சந்திக்க நேர்ந்தது. உள் நாட்டில் பிரயாணஞ் செய்து கொண்டிருந்தேன். சில மண் குடிசைகளும், செல்வர்களது நாட்டுப்புற வாசஸ்தலங்களாகிய இரண்டொரு மாளிகைகளும் மாத்திரம் உள்ளனவாய் வங்காளத்தில் பெருந் தொகையாகக் காணப்படும் கிராமங்களில் ஒரு கிராமத்திற்கு வந்து சேர்ந்தேன். ஒருநாள் ஆற்றங்கரையில் இருக்கும்பொழுது ஒரு வேலையாள் வந்து, "ஐயா, நீர் ஒரு வைத்தியரா? எங்கள் தலைவி சுகவீனமாக இருப்பதால் உமது உதவியை நாடுகிறாள்" என்று கூறி என்னை அழைத்துப் போனான். இவ்வாறாக நாங்கள் சந்தித்துச் சிறிது நேரத்திலேயே நண்பர்களாகிவிட்டோம். இதிலும் அதிசயமானது என்னவெனில், முதலிலிருந்தே, இப் பெண்ணின் கைப்பரிசமும், பேச்சும், புன்னகையும் என் உள்ளத்தில் அன்பு நிறைந்த உணர்ச்சிகளை எழுப்பின. ஆனால் இதில் ஏதோ பிரமாதமான காரியம் இருப்பதாக ஒருவரும் எண்ணிவிடக்கூடாது. இதற்குக் காரணம் வேறு. இப் பெண்ணின் கண்ணொளி என்மேற் பரவி யிருக்கும்போது இவள் நோக்கில் பல வருடங்கட்குமுன் பழகிய ஒரு பெண்ணின் நோக்கத்தைக் கண்டேன். இவள் பேச்சில் அப்பெண்ணின் குரலைக் கேட்டேன். இவள் தோற்றமும் புன்னகையும் அப்பெண் என் கண்முன் நிற்பதுபோலக் காட்டின. இதுவே நான் அடைந்த இன்ப உணர்ச்சிக்குக் காரணம்.

இதை வாசிக்கும் பெண்மணி, "ஆம், ஆம். ஆடவர்கள் இவ்வாறு திகைப்பதுண்டு," என்று புன்னகை புரிதல் கூடும். "ஆடவர்கட்கு காதல்

மலரின் வாசனை ஒருபோதும் தெவிட்டாது. வசதிக் கேற்பப் பெயரை மாற்றிச் சொல்வீர்கள். வேண்டியபோது பரிசிலனையும் செய்வீர்கள். இது அரும்பா? அலரா?'' என்கின்றீர்.

நீர் கூறுவது சரியாகலாம். ஆயினும் நான் அரும்பிற்கும் அலர்ந்த ரோஜா மலருக்கும் வேற்றுமை அறியாதவன் அல்ல. அறிந்தவனாதலினால்தான், இது காதல் அல்ல, நட்பே என்று அழுத்தமாகக் கூறுகிறேன். மிக உருக்கமானதும், மென்மை வாய்ந்ததும், ஆயினும் ஆழ வேரூன்றியதுமான இந் நட்பு இறைவன் மனிதர்க்கு அளித்த அரிய வரப் பிரசாதமாகும். ஒரு ஆண் மகனுக்கும் பெண்ணுக்குமிடையில் மாத்திரம் இத்தகைய நட்பு சாத்தியமாகும். இரு ஆண் மக்கட்கிடையில் நிகழாது. ஒரு மனிதன் இன்னொரு மனிதனுக்குத் தன் உள்ளத்தைத் திறந்து, அதிக துயரமும் உருக்கமுமான தனது இரகசியங்களைக் கூறி, தன் இருதயத்தை மறைக்கும் திரையை நீக்கித் தன் வாழ்க்கையின் ஆழ்ந்த அநுபவங்களைக் காட்டி, அநுதாபத்தை எதிர்பார்க்க முடியுமா? இது அசம்பாவிதமாகத் தோன்றுகிறது. இரக்கத்துடன் கண்ணீர் சொரிந்து அநுதாபம் காட்டுவது பெண்மைக்கே உரிமையாகும். இவட்கு எல்லாவற்றையுங் கூறாமலிருக்க முடியுமா?

மாலை நேரம். இருவரும் தனியே இருந்தோம். அறையில் அதிக வெளிச்சம் இல்லை. தனது அழகிய கண்களின் பார்வையை என் முகத்திற் செலுத்தி, பெருமூச்சுடன், ''என்ன விஷயத்தைக் குறித்து நினைக்கின்றீர். உமது முகத்தில் ஒரு பெரிய கவலையின் சாயை தோன்றுகிறது. உமது மனத்தில் அதிக துயரம் இருப்பதாகத் தெரிகிறது'' என்றாள். இந்த உருக்கமான குரலைக் கேட்டும் இசையாது இருக்க இன்னொருவரால் முடியுமோ இல்லையோ நான் அறியேன். எனக்கு அது அசாத்திய மாயிற்று. கண்களில் நீர் ததும்ப, ''இறைவன் நான் பட்ட துயரத்தை வேறெவர்க்கும் தராதிருப்பானாக'' என்றேன்.

கண்ணீர்ப் படலத்துக் கூடாக என் பக்கத்தில் இருந்த மெல்லிய உருவம் புலப்பட்டது. இந்த அமைந்த தன்மைக்குப் பதில் இளமையின் துடி துடிப்பு இருந்தால், கண்களில் விளங்கும் கவலைக்குப் பதில் ஒள்ளிய நகை நோக்கம் மிளிர்ந்தால், முகமும் இவ்வளவு மெலிவு இல்லாததாக விளங்கினால், உருவமும் சற்று இளமை வாய்ந்ததாக இருந்தால், இவ்வுருவம், என் மனதிற் குடிகொண்ட பெண்ணின் இணைப்படிவமாகாமல் அப்பெண்ணாகவே தோன்றும்.

ஒரு பெருமூச்சு என் காதிற் கேட்டது. இது என்னை எனது ஆழ்ந்த சிந்தனையிலிருந்து எழுப்பிவிட்டது. ''என் சொற்களால் வருத்தம் உற்றீரா?'' என்று கேட்டேன்! பதில் இல்லை. மசங்கல் மாலையில் முகத்தை நன்றாகப் பார்க்க முடியவில்லை. ஆனால் கண்களில் நீர் நிறைந்திருந்தது போலத் தோற்றியது.

''உம்மை வருத்துவது யாது?'' பின்னும் மிருநாளினி பேசவில்லை.

விஷயத்தை விளங்கப் படுத்துமாறு வேண்டினேன். ''ஏதும் சுகவீனமா? பேசாமலிருப்பது விநோதமாக இருக்கிறது'' என்றேன்.

''உமக்கு நான் முற்றிலும் அந்நியமானவள் அல்ல என்று நினைத்தேன்'' என்றாள். குரல் மிக மெல்லியதாகவும், ஆ! துயரம் நிறைந்ததாகவும் இருந்

தது. இது கவலைக்குக் காரணமானது எனக்குப் புன்னகையை விளைத்தது. "இதுவா உம்மை வருத்துவது? எதனால் இம் முடிவிற்கு வந்தீர்?" என்றேன்.

"உமக்கு என்மீது நம்பிக்கை இல்லாமையால்" என்றாள்.

"உம்மீது நம்பிக்கை இல்லாமையாலா? நான் இவ்வளவு நம்பிக்கை கொள்ளக்கூடிய நண்பர் எனக்கு வேறு யார்?" என்றேன்.

"ஆயினும் எனக்கு உமது துயரத்தைக் கூறுகின்றீரில்லை."

இச்சொற்கள் என்னை ஆழ்ந்து சிந்திக்கச் செய்தன. உடனே பதில் கூற முடியவில்லை. "சகோதரி"—நான் பேசத் தொடங்கியபோது என் மனம் பாரமாக இருந்தது—"இவ்வாறு என்னைச் சந்தேகிப்பது தகாது. என் மனத்தின் இரகசியங்களைக் கூறுதற்கு எனக்கு உலகத்தில் வேறு எவரும் இல்லை. உன்னிடம் கூறப் பின்னிடுவது உனக்கு வருத்தம் தாராமலிருக்க விரும்புவதாலேயே. எனது சரித்திரம் துக்ககரமானது. துயரம் நிறைந்தது என்பதை நினைக்க வேண்டும்" என்றேன். இப்போது பழகினவர்களைப் போல், "நீ" என்றும், "அன்பார்ந்த சகோதரி" என்றும் பேசத் தொடங்கி விட்டேன். இச்சொற்கள் தாமாகவே வாயில் வந்தன. மனதில் தோற்றினதையே கூறினேன்.

"எனக்கு வருத்தமாக இருந்தாலும் ஒரு நண்பரின் நன் நம்பிக்கைக்குப் பாத்திரமாக இருக்கிறேன் என்னும் நினைவு அவ் வருத்தத்திற்குப் போதிய ஈடாகுமல்லவா?" என அதே இனிய குரல் பதில் அளித்தது.

"சகோதரி, நீ கூறியது சரியே. உண்மையான மனதின் தூண்டுதலை அனுசரிக்கிறாய். நான் தயங்கினால், என் மனதில் உன்னை முற்றாக நம்பா விட்டால், அதற்குக் காரணம் என் மனதின் தூண்டுதலை நான் கேளாததே யாகும். நான் நம்பிக்கை வைத்து என் மனத்துயரை அறிந்துகொள்ளக் கூடிய ஒருவர்க்கு வெளியிட்டிருந்தால் எப்பொழுதோ ஆறுதல் உற்றிருப்பேன். சகோதரி, நான் கூறவேண்டியவர்கட்கு இனி ஒருபோதும் கூற முடியாதாகையால் என் பெருந்துயரின் சரித்திரத்தை உனக்குக் கூறுகிறேன். கேள். உனக்கு எல்லாவற்றையும் கூறுவதால் வெட்கத்துக்கஞ்சி நான் அவட்குக் கூறமாட்டாத எனது அநுசிதமான செய்கைக்குப் பரிகாரம்—அத்தகைய செய்கைக்குப் பரிகாரம் கூடுமானால்—பெறவுங் கூடும். இதைக் கேட்டு இந்தப் பாவி உன்னுடைய நன்னம்பிக்கைக்குச் சிறிதும் பாத்திரமாகாதவன் என்பதையும் ஆயினும் உன்மீது எவ்வளவு நம்பிக்கை வைக்கிறான் என்பதையும் அறிந்து கொள்.

'இங்கிலாந்திலிருந்து திரும்பி வந்தபோது எனது சொந்தக்கிராமத்தில் நண்பர்களுடனும் உறவினர்களுடனும் சிலநாள் வசித்து விட்டுக் கல்கத்தாவிற்கு வந்தேன். நான் பட்டாளத்து வைத்தியராகக் கடமை பார்க்கப் போவதற்குச் சில வாரங்களே இருந்தன. இந்நாட்களை ஒரு நண்பர் வீட்டிற் கழித்தேன். இவர் குடும்பத்திற்கும் எமது குடும்பத்திற்கும் நெடுநாட் சினேகம் இருந்து வந்தது. இவர் ஒரு ஹைகோர்ட் வக்கீல். பெருந்தொகைப் பணம் சேர்த்திருந்தார். ஆனால் அவர் வாழ்க்கை தனிமை யுற்றதாக இருந்தது. அவர் மனைவி இறந்து விட்டார். அவரது சொத்திற்கும் பூரண அன்பிற்கும் பாத்தியதை உடையவளாக ஒரே புதல்வி இருந்தாள்.

மாயாவதி சுகவீனமாய் இருப்பதாகக் கேள்விப்பட்டிருந்தேன். அது ஒரு விநோதமான நோய். சில சமயங்களில் ஒருவித மயக்கம் வருவதுண்டு.

ஆயினும் வலிகளிற் காணப்படும் கை கால் உதறல் முதலிய குணங்கள் காணப்படுவதில்லை. மயக்கம் இருக்கும் பொழுதும் சுற்றிலும் நடப்பவைகளை உணர்ந்து கொள்வதாகத் தெரிந்தது. கண்கள் மாத்திரம் மூடியபடி இருக்கும். மயக்கம் தெளிய இருபத்துநான்கு மணி நேரம் செல்லும். தெளிந்த பின்னும் தேகம் பழைய நிலைமைக்கு வர இரண்டு மூன்று நாட் செல்லும். இன்னும் இதில் விசேஷம் என்னவெனில், இது எப்போது வருமென்று தெரியாதாம். இதற்குக் காரணமும் தெரியாது என்றார்கள். ஆனால் நோயாளிக்குக் காரணம் தெரிந்திருக்க வேண்டுமென்றும் அதைக் கூற விரும்பவில்லை என்றும் நான் அபிப்பிராயப்பட்டேன்.

நான் வருவதற்கு இரண்டொரு நாட்களுக்கு முன்னரும் இம்மயக்கம் வந்ததாம். நான் வந்து சேர்ந்த பொழுது மாயாவதி படுக்கையிலேயே இருந்தாள். அவள் தகப்பனார் என்னிடம் தமது மகளுடைய நோயைக் குறித்துக்கூறி அவளை நான் பார்க்கவேண்டும் என்று விரும்பினார். உடனே, முடிக்கப்படாத கூந்தலும், கவலை யீனமான உடையும், அமைதியற்ற கண்களும், மெல்லிய உருவமும் உடைய துடினக்காரியான ஒரு சிறுமியின் உருவம் என் மனதில் தோன்றிற்று. பிரான் கிருஷ்ண பாபுவின் விருப்பப்படி அவருடன் மாயாவதியின் அறைக்குப் போனபோது, நான் ஐந்து ஆண்டுகட்கு முன் விட்டுப்போன, குறும்பில் விருப்பமுள்ள துடினக்காரியான சிறுமியைக் காண்பேன் என்று எதிர்பார்த்தேன். மாயாவதியை அவள் உண்மையில் இருந்தபடி கண்டது எனக்கு வியப்பை அளித்தது.

ஒரு சாய்ப்புக் கட்டிலில், நேர்த்தியான வெண்டுகில் அணிந்த ஒரு இளம் பெண் சாய்ந்திருக்கக் கண்டேன். மயிர்ச்சுருள் நெற்றியிற் கிடந்தது. வாரி முடிக்கப்பட்ட கூந்தல் கழுத்தின் அழகை வெளிக்காட்டியது. அவளது சாகசமான நொடி பாவனைகளும், நிகார்த்தமான களி துளும்பும் உருக்கமான புன்னகையும் என் மனத்தில் இன்னமும் விளங்குகின்றன. இவை ஒரு போதும் என் மனத்தைவிட்டு நீங்கா. எதிர்பாராத இந்த அழகிய தோற்றம் எனக்கு மருட்கையை விளைத்தது. இவளா நோயாளி? இவளிடத்தில் நோயின் அடையாளம் எதுவுங் காணேம். முகம் மாத்திரம் சற்று வெளுத்திருந்தது. அதுவும் இவள் சாயலை அதிகரித்ததன்றி வேறல்ல. கையில் பாதி அலர்ந்த ரோஜாமலர் ஒன்ற வைத்து அதன் வாசத்தை மோந்து கொண்டிருந்தாள்.

இனிய புன்னகையுடன் அமைதியாக என்னை வரவேற்றாள். கையில் இருந்த மலரைப் பக்கத்தில் இருந்த மேசைமீது வைத்துவிட்டு, "சுப்பிரகாஷ் பாபு, வாருங்கள். உங்களைக் காண்பதில் மகிழ்ச்சி அடைகிறேன். உங்கள் தோற்றத்தில் சிறிதும் மாறுதல் ஏற்படவில்லை. உடையில் ஏற்பட்ட சிறு மாறுதல் போக ஐந்து வருடங்கட்கு முன் இருந்தது போலவே இருக்கிறீர்கள்" என்றாள். கம்பீதமான குரல் வசீகரத்தை அதிகரித்தது. என்னால் பதில்கூற முடியவில்லை. என் கண்களை நான் நம்ப முடியவில்லை. இது "மாயா" வா அல்லது மாயையேயா? அவள் தந்தை, கட்டிலருகில் ஒரு நாற்காலியில் என்னை உட்காரும்படி கூறிவிட்டுத் தான் ஜன்னலருகில் இருந்து பத்திரிகை வாசிக்க ஆரம்பித்தார். நான் இதுவரை ஒரு வார்த்தையும் பேசவில்லை. இப் பெண்ணுக்கு என் நடையுடை பாவனைகள் அசங்கதமாகத் தோன்றும் என்று எண்ணத் தொடங்கினேன்.

சிறிதுநேரஞ் சிந்தித்த பின், "அம்மணி, இன்னும் தேகமெலிவு தீர வில்லை போலும்" என்றேன். "இந்தச் சில வருடங்களில் 'அம்மணி' ஆகி விட்டேன். ஆங்கிலேயரது பழக்க வழக்கங்களைப் பின்பற்றுகிறீர் போலும்" என்று மந்தகாசத்துடன் சொன்னாள். இது என்னைச் சற்றுப் பிரமிக்கச் செய்தது. நான் போனபொழுது சின்னஞ் சிறுபெண்ணாக இருந்தாய். அந் தச் சிறுமி நீயே என்பதை உணர்ந்துகொள்ள முடியவில்லை" என்றேன்.

"ஆனால் நான் உம்மை மறக்கவில்லை. மறதி, ஆடவர்க்கு இயற்கையான குணம் போலும்" என்று மெல்லக் கூறினாள். இச்சொற்கள் தகப்பனுக்குக் கேட்காமலிருக்கவேண்டுமென்று விரும்பினாள் போலும். அவரோ எங்கள் பேச்சைக் கவனியாமல் பத்திரிகையில் ஆழ்ந்திருந்தார். அவள் வார்த்தைகள் எனக்கு இன்பம் ஊட்டின. உள்ளக் கிளர்ச்சியை விளைவித்தன.

"மாயா, நீ எப்போதும்போல், கூடுமானால் மோசமான குறும்புக்காரி யாக இருக்கிறாய். ஐந்து வருடங்கட்கு முந்திய சிறுமியை ஞாபகத்தில் வைத்திருந்தால் அது நான் உன்னை மறக்கவில்லை என்பதற்குப் போதிய அத் தாட்சியாகாதா?" என்றேன்.

"சரி. நீர் என்னை மறக்கவில்லை என்பதற்குக் காட்டிய அத்தாட்சியைக் கண்டு சந்தோஷப்படுகிறேன். இப்பொழுது இங்கிலாந்தில் உமது அனுப வங்களைப் பற்றிக் கூறவேண்டும்."

"அது பிறகு பேசலாம். முதலில் உனது நோயைக் குறித்துக் கூறு. இம்மயக்கம் வரும்பொழுது கூட அது வருகிறதென்று தெரியாதாமே?"

"ஆம்"

"இதற்குக் காரணமும் தெரியாதா? உணவில் ஒழுங்கீனமா? அல்லது அதிகம் பேசுவதா? அல்லது அதிகம் வாசிப்பதா? அல்லது வேறு ஏதேனும் காரணமா?"

இதற்குமேல் என்னைக் கேள்வி கேட்கவிடவில்லை. மாயா குறுக்கிட்டு, "நீர் ஒரு வைத்தியர். இவை எல்லாங் கண்டுபிடிப்பது உமது வேலை. நோயின் காரணங்களை நான் அறிவேனென்று எப்படி எதிர்பார்க்கலாம்? வீண் கேள்விகளிற் காலத்தைப் போக்கவேண்டாம். இங்கிலாந்தைப்பற்றிக் கூறும். அது எனக்கு உற்சாகம் அளிக்கும்" என்றாள்.

இதிலிருந்து எனது கேள்விகட்கு அவள் பதில் சொல்ல விரும்பவில்லை என்று அறிந்துகொண்டேன். எங்ஙனமாயினும் இது பிறகு ஆராய்ந்து கொள்ளலாம். இப்பொழுது அவள் விருப்பத்திற்கு இசைந்தேன். "இங்கி லாந்தா? அது பூலோக சுவர்க்கம். அங்கு சென்றால் திரும்பிவர மனம்வராது" என்றேன்.

"நீர் திரும்பிவர வேண்டியதாயிற்றே பாவம். உம்மிற் பாதியை அங்கு விட்டு வந்திருப்பீர் என்று நினைக்கிறேன்" என்றாள்.

"முழு மனிதனையும் அங்கு விட்டுவிடுவதில் ஆக்ஷேபனை இல்லை. ஆனால் இந்தப் பாரத்தை ஏற்றுக்கொள்ள எவளும் முன்வரவில்லை" என்றேன்.

இதுவரை மிருநாளினி ஒரு வார்த்தையும் பேசாமல் என் கதையைக் கேட்டுவந்தவள் இப்போது சிறிது ஆத்திரத்துடன், "என்ன பெருந்தகை மை" என்றாள். விநோதம்! இவையே அன்று மாயா பிரயோகித்த சொற்

கள். எனக்கு ஒரு திகைப்பு ஏற்பட்டது. ஆச்சரியத்துடன் மிருநாளினியின் முகத்தைப் பார்த்தேன்.

"அப்பால் நடந்தது என்ன?" என்று அமைதியாகக் கேட்டாள். என் கதைத் தொடர்பை நழுவ விட்டுவிட்டேன். "விசேஷமானது ஒன்றுமில்லை" என்று பதில் அளித்தேன்.

"அதற்கிடையில் அவள் தந்தை பத்திரிகை படித்து முடித்துவிட்டார். அவரும் நானுமாக வெளியே சென்றோம்" என்றேன்.

"உமது மனம் உம்முடன் வரவில்லை."

"எனக்குக் காட்சி மாத்திரையிற் காதல் உண்டாகும் என்பதில் நம்பிக்கை இல்லை. இருந்தால் ஆம் என்பேன்."

"ஆனால் அதை நீர் அநுபவத்தில் அறிவதற்கு அதிக காலம் பிடிக்கவில்லை என்று தோன்றுகிறது."

"நான் இதை மறுக்க முடியாது. எனக்கு இப்போது வெட்கமாக இருக்கிறது. ஆனால் அப்போது மாயாவை எனக்கு விவாகஞ் செய்து கொடுக்கும்படி அவள் தந்தையைக் கேட்பதற்கு நான் வெட்கப்படவில்லை. ஒரு வாரத்திற்குள் கேட்டேன். ஆ! அன்று நான் பட்டதுயரம்! தலைமேல் அந்தச் சாபமும், உள்ளத்தில் மனோபீஷ்டத்தை இழந்த பெருந்துயருமாக இப்படியே என் எஞ்சிய வாழ்நாளைக் கழிக்கவேண்டுமா? அன்று மாயா ஒருபோதும் எனக்கு உரியவளாகமாட்டாள் என்றும் இன்னொருவர்க்கு நிச்சயார்த்தஞ் செய்திருந்ததாகவும் அவளது நோய் காரணமாகவே விவாகம் பின்போடப்பட்டிருப்பதாகவும் அறிந்தேன். ஆனால் என் உயிரை உண்ணும் பெருந்துயர் அப்பொழுது உண்டானதல்ல. காதலை இழந்த துயரை வென்றவர்கள் பலர் உண்டு. அக்காயங்கள் ஆறும். காலஞ் செல்லத் துயர் நீங்கும். ஆனால் எனது பெருந்துன்பம்—

அப்பால் பேச நாவெழவில்லை. மிருநாளினி கண்களை மூடிக்கொண்டு எனது கையை மெல்லப் பிடித்துத் தன் கைமீது வைத்தாள். என் கையில் கண்ணீர்த் துளிகள் விழுந்தன. "சகோதரி, இம்மட்டில் கதை நிற்கட்டும். இன்னும் கேட்டால் நீ தாங்கமாட்டாய்" என்றேன். உரைகுளற இவ்வளவுதான் கூறமுடிந்தது. சலனமுற்ற குரலில் "இன்னுஞ் சொல்லவேண்டும். கடைசிவரை கேட்க எனக்குப் போதிய பலம் இருக்கிறது. என்மீது உமக்கு நம்பிக்கை இருந்தாற்போதும்" என்றாள்.

"ஆயின் எல்லாஞ் சொல்லிவிடுகிறேன். கேள். என் நண்பரின் வீடு இடவசதியுள்ள பெரிய மாளிகை. நடுவில் ஒரு கூடமும் இரு பக்கங்களிலும் இவ்விரண்டு அறைகளும் இருந்தன. ஒரு பக்கத்து அறைகளில் மாயாவும் அவள் தந்தையும் இருப்பார்கள் மற்றப் பக்கத்து அறைகளில் ஒன்று விருந்தினர்க்குக் கொடுபடும். மற்றது உணவருந்தும் அறையாகும்.

எனக்கு மாயாவை விவாகஞ் செய்து கொடுக்கும்படி நான் கேட்டதற்கு அவள் தந்தை மறுத்த தினம் ஞாபகத்தில் இருக்கிறது. அன்று முழுதும் நான் மாயாவைக் காணவில்லை. சாயந்தரம் அவள் அறையிற் சென்று சிறிது நேரம் பேசியிருப்பேன். ஆனால் அவள் வரன் அவளுடன் பேசிக்கொண்டிருப்பதாக அறிந்தேன். நான் சசி பாபுவைப் பலமுறை இந்த வீட்டில் சந்தித்திருந்த போதிலும் மாயாவை அவர்க்கு நிச்சயார்த்தஞ் செய்திருந்ததாக

அன்றுதான் அறிந்தேன். அன்று இரவும் மாயா எங்களுடன் உணவருந்த வரவில்லை. ஆனால் இது ஒரு விசேஷமல்ல. பல வேளைகளில் மாயா தன் அறையிலேயே சாப்பிடுவது வழக்கம். சாப்பிட்ட பிறகு கூடத்திற்குப் போனோம். பிரான் கிருஷ்ண பாபு ஒரு சாய்மான நாற்காலியில் படுத்துத் தூங்கிவிட்டார். சசி பாபு அதிக துயரம் உடையவர்போலக் காணப்பட்டார். அது எனக்கு அப்போது விளங்கவில்லை. நான் அவரை மனிதரில் அதிக பாக்கியவான் என்று கருதினேன். அவர் ஒரு வீணையை எடுத்துச் சுருதி கூட்டத் தொடங்கினார். நான் ஜன்னலருகில் நின்று நிலாக் காட்சியைப் பார்த்துக்கொண்டிருந்தேன். பின் பனிக்காலம் போய் வசந்தகாலம் ஆரம்பமாகியிருந்தது. மரங்களும் நிழல்களும், ஏன், சந்திரிகைகூடச் சலனம் உறுவதுபோலத் தோன்றியது. அப்போது, கங்குலின் இதயத்திலிருந்து தோற்றிய கந்தர்வ கானமா? உள்ளத்தை ஊடுருவும் ஓலக் குரலுடன் வீணையிலிருந்து நாதங்கள் வெளிப்பட்டுப் பரந்தன. நிசப்தமான இரவு ஆழமான ஓருணர்ச்சியாற் றத்தளிப்பதுபோலிருந்தது. காலையில் என் கதியைக் கேட்டபோது கூட இவ்வளவு கையறவு ஏற்பட்டதில்லை. அப்போது திக்பிரமை கொண்டவன்போல் இருந்தேன். உணர்ச்சி நரம்புகள் மரத்துப் போயினபோலிருந்தது.

இப்பொழுது வீணையின் கீதம் ஒவ்வொரு நரம்பிலும் துயர வேதனையைத் தூண்டிவிட்டது. வீணை தனது துயரச் செய்தியை உலகத்திற்குக் கூறுந்தோறும், ஒவ்வொரு நாதத்திற்கும் என் உள்ளம் விம்மியது. ஒவ்வொரு ஒலிக்கும் "அவள் எனக்கு உரியவள் அல்ல, அவள் எனக்கு உரியவள் அல்ல" என்று என் புண்பட்ட உள்ளம் புலம்பியது. வாழ்க்கை வறுங்கானல்; நீண்ட மரணத் துன்பமே.

பைத்தியம் பிடித்தவன்போலானேன். இந்தப் புலம்புதலைச் சகிக்க மாட்டாதவனாய் அறையை விட்டு விரைந்து வெளிச் சென்றேன். மாயாவின் அறைக்கு எதிரில் சென்றபோது கதவு பாதி திறந்திருக்கக் கண்டேன். வேதனையால் வெறிபிடித்தவனாய் உள்ளே ஓடினேன். மாயா ஜன்னலருகிற் கட்டிலிற் கிடக்கக் கண்டேன். பக்கத்தில் நின்று பருகுபவன்போலப் பார்த்தேன். நிலவொளி சூழ நித்திரை செய்யும் முகம் எவ்வளவு அழகாக விளங்கியது! பரவசமுற்றுப் பார்த்துக்கொண்டு நின்றேன். எல்லாம் மறந்தேன். அவள் எனக்கு உரியவள் அல்ல என்பதையும் அயர்த்தேன். அவள் அழகினால் மதிமயங்கி. அயர்ந்து தூங்குபவளை ஆராத ஆவலுடன் பல முறையும் முத்தமிட்டேன்."

மிருநாளினி பதகளிப்புடன், "கள்வன்போல்—நீர்—அவள் கண்கள் மூடியிருக்கையில்—" என்றாள்.

"நீ இதற்காக என்னை வெறுக்கவேண்டுமாயின் வெறுக்கலாம். ஆனால் நான் ஐம்புலன்களையும் அடக்கிய மகரிஷியல்ல. சாதாரண மனிதனே என்பதை நினைத்துக்கொள். இன்னும் இப்படியான சந்தர்ப்பம் நேர்ந்தால் நான் மீண்டும் இவ்வாறு செய்யக்கூடும். யார் அறிவார்? ஆனால் அதனால் நான் அடைந்த துயரம் கன் மனதையும் கரைக்கும். மெய்யாகவே நான் போதிய தண்டனை அநுபவித்துவிட்டேன்.

"அப்பால்" என்று மருநாளினி அழுதுகொண்டே கேட்டாள். மறுநாள் அவள் தகப்பனார் தமது மகளுக்கு முதனாட் சாயங்காலம் மயக்கம் வந்ததாகக்

கூறினர். வெட்கத்தாலும் துக்கத்தாலும் விழுங்கப்பட்டவனுனேன். எல்லாம் வீணே. அவளிடம் எனது அடாத செய்கையை ஒப்புக்கொண்டு மன்னிப்புப் பெற எனக்குப் போதிய தைரியம் இருந்ததில்லை. இரண்டொரு நாளில் மாயா குணமடைந்தாள்.

அவள் தகப்பனுரிடத்தில் ஒரு மாறுதல் ஏற்பட்டது. அவர் கவலையுடையவரானுர். கூற முடியாத விஷயம் எதையோ மனதில் வைத்திருப்பவர் போலிருந்தார். எனக்கு ஒன்றும் விளங்கவில்லை. ஆனுல் விஷயத்தை அறிய வெகுநாட் செல்லவில்லை. ஒருநாள் இருவரும் தனியே இருக்கும்போது திடீரென "மாயாவை விவாகஞ் செய்துகொள்ள இப்பொழுதுஞ் சம்மதமா?" என வினவினுர். எனக்கு நிர்ப்பாக்கியமுற்ற சசி பாபுவின் நினைவே முதலில் தோன்றியது. "ஆனுல் சசி பாபு?" என்று பரிவுடன் கேட்டேன். இது அவருக்குப் பிடிக்கவில்லை. "அவர் தமது பெற்ருேருடன் கலந்துகொள்ளவில்லையாம். இப்பொழுது அவர்களுடன் பேசியதில் அவர்கட்குச் சம்மதமில்லையாம்" என்று சற்றுக் கோபமாகவே பதில் அளித்தார். நான் இந்திர பதவி எய்தினவன்போற் களிப்புற்றேன் என்று சொல்லவும் வேண்டுமா? சில நாட்களில் விவாகமும் நடந்தேறியது.

நான் கதையைச் சற்று நிறுத்தினேன். மிருநாளினி பொறுத்திருக்கவில்லை. "அப்பால் நடந்தது என்ன?" என்று ஆவலுடன் கேட்டாள்.

"அப்பால் நடந்தது என்னவா? இந்த உலகத்தில் மெய்யான இன்பம் இல்லை என்பது எவ்வளவு நன்மை! என் மனேபீஷ்டம் நிறைவேறியும், என் உயிர்க்குயிராக நான் எண்ணியவளை அடைந்தும் எனக்கு மகிழ்ச்சி ஏற்படவில்லை.

நான் எனது உத்தியோகம் பார்க்கப்போவதற்கு ஒரு வாரமே இருந்தது. கங்கைக் கரையில் ஒரு மாளிகையில் வசித்துவந்தோம். அந்தப் பக்கங்களில் இயற்கைக் காட்சி வெகு விசித்திரமானது. ஆனுல் இன்பத்தை அறியாத மனதிற்கு இயற்கையின் அழகுகள் என் செய்யும்? மாயா மகிழ்ச்சியை இழந்துவிட்டாள். எப்போதும் துயரம் உடையவளாகவே இருந்தாள். நான் அன்பு பாராட்டினுல் அவள் கவலை சிறிதுநேரம் மறைந்து முன்னிலும் அதிக உரத்துடன் தோன்றும். பல முறைகளில் அவள் எதுவும் பேசாமல் என்னிடமிருந்து முகத்தைத் திருப்பிக்கொண்டபோது கண்களில் நீர் நிறைந்திருப்பதைக் கண்டேன். இது எனக்கு வருத்தமாக இருப்பதை உணர்ந்து பேச உன்னியும், தன் மனதில் உள்ளதை என்னிடம் கூறமாட்டாதவள் போலத் தோன்றினுள். இன்னும் சசி பாபுவிடத்தில் காதல் உடையவளா யிருந்தாள் என்றல்லது வேறு எதை யான் எண்ணுவது? நான் நரக வேதனையை அநுபவித்தேன்.

ஒரு நாள் நிலவில் ஆற்றங்கரையில் இருவரும் இருந்தோம். பூரண சந்திரன் ஆகாயத்தை ஒளிமயமாக்கியது. கீழே நீரலையில் சந்திர பிம்பம் அலைந்துகொண்டிருந்தது. உருக்கி வார்த்த வெள்ளியென ஓடும் நீர்த்தாரை இருபுறமும் மர நிழலில் இருளை ஒதுக்கியது. எம் மனத்திருள் இவ்விருளின் சார்பால் திணிவுறுவது போலிருந்தது. திடீரென நீரலையிலிருந்து வீணை கானம் கிளம்பியது. மாயா திடுக்கிட்டுத் தலையைத் திருப்பிக்கொண்டாள். ஆழ்ந்த அதிர்ச்சியைக் காட்டும் குரலில், "அன்றும் இதே கானத்தைக் கேட்டேன். இது அவரே" என்ருள்.

"யார்?" என்றேன்.

"சசிபாபு. அந்தக் கானம் என் அறிவைக் கொள்ளை கொண்டது. அதைத் தாங்க முடியவில்லை. மயங்கி விழுந்தேன். என்னை மன்னியுங்கள்" என்றாள்.

அப்பொழுது எதைக் குறித்துக் கூறுகிறாள் என்பது எனக்குத் தெரிந்தது. துக்கத்தால் விழுங்கப்பட்டேன். ஆயினும் நானே இது செய்த பாவி, சசிபாவுவல்ல என்பதைக் கூறமாட்டாதவனானேன். வெட்கம் என் வாயை மூடிவிட்டது.

பின்னும், "அன்று சாயங்காலம் நான் உங்களைக் காதலிப்பதால் சசிபாபுவை மணந்துகொள்ள முடியாது என்பதை அவரிடம் கூறினேன். ஒரு வார்த்தையும் பேசாமற் போய்விட்டார். அவர்க்காக மிகுந்த துயரம் உற்றேன். அழுதேன் என்னை நிந்தித்துக் கொண்டேன். பிறகு வீணையின் ஒலம் அவர் துயரத்தை விளக்கியபோது என் மனம் பிளந்துவிடும்போலிருந்தது. சிறிது நேரத்தில் மூர்ச்சையாகிவிட்டேன். நான் அவர்க்காகக் கண்ணீர் சொரிந்தேன். அதற்குப் பிரதியுபகாரமாக நான் செயலற்றுக் கிடக்கையில் அந்த வெட்கமற்ற பாவி என்னைத் தீண்டத் துணிந்தான். என்னை மன்னியுங்கள். இது என் பிழை அல்லவே. என் அன்பு உமக்கே உரியது" என்றாள்.

இவ்வார்த்தைகள் என் மனத்தை ஊடுருவின. என் முழுப் பலத்தையும் கூட்டி, தைரியத்துடன், அவள் கையைப் பிடித்துக் கொண்டு, "நானே அந்தப் பாவி. சசிபாபு அல்ல" என்று சொல்லத் துணிந்தேன். ஆனால் இவை ஒருபோதும் சொல்லப்படவில்லை. மாயா திடீரென்று மூர்ச்சித்து ஆற்றில் விழுந்துவிட்டாள். கூடக் குதித்தேன். ஆனால்..............."

என் பலம் போய்விட்டது. பிரமை பிடித்தவன்போலானேன். பக்கத்தில் மிருநாளினியின் அழுகை என்னை எழுப்பிவிட்டது. "என்னை அறிந்து கொள்ளவில்லையா? நான் நீர் எண்ணியபடி மரணமுறவில்லை. இப்போது சொன்னதுபோல் அப்பொழுது ஏன் எல்லாவற்றையுங் கூறவில்லை?" என்று உருக்கமாகக் கேட்டாள்.

இப்பொழுது உண்மையை உணர்ந்து கொண்டேன். கண்களை மறைத்த படலம் கழன்றுவிட்டது. மாயா, இறந்ததாக நான் எண்ணி வருந்திய மாயா இவளே.

"ஆம். நானே மாயா. நீர் என்னை அறிந்து கொள்ளவில்லை. ஆற்றங்கரையில் இருக்கும்போது தூரத்திலேயே கண்டு நான் உம்மை அறிந்து கொண்டேன்" என அவளது மெல்லிய இனிய குரல் கூறியது.

"ஆயின் இதுவரை ஏன் கூறவில்லை?" என்று கேட்டேன். அழுகையின் மத்தியில் புன்னகை புரிந்து, என்னை அறிந்து கொள்ளாமலே என்மீது அன்பு கொள்வீரா என்று பார்க்க விரும்பினேன்" என்றாள்.

"பழைய குறும்பே. வர வர மோசமான குறும்புக்காரியாகின்றாய்" என்றேன்.

"ஆனால் இந்த ஐந்து வருடமும் என் வாழ்க்கை ரசமற்றதாகவே இருந்தது. நான் பிழைத்தேன். ஆனால் நான் ஏன் காப்பாற்றப்பட்டேன்? ஏன்

சசிபாபு ஆற்றிலிருந்து என்னை மீட்டார்? ஆயின் இத்தனை வருடங்களாக எங்கிருந்தீர்?'' என்றாள்.

''உனக்குப் பிறகே ஆற்றில் குதித்ததுதான் தெரியும். பிரஞ்ஞை வந்த பொழுது ஒரு வைத்தியசாலையிற் கிடந்தேன். யாரால் காப்பாற்றப்பட்டு எவ்வாறு வைத்தியசாலையிற் சேர்ந்தேன் என்பதைப்பற்றி ஒன்றும் தெரியாது. ஒரு மாதத்திற்கு முன் வரை என் மனம் வெறுமையாக இருந்தது. ஒரு மாதத்திற்கு முன் தான் எல்லாம் நினைவிற்கு வந்தன'' என்றேன்.

''நான் உங்களைத் தேடிக் கல்கத்தாவிற்கு வந்தேன். அங்கிருந்து டக்கா சென்றேன். மீண்டும் கல்கத்தாவிற்கு வந்தேன். கங்கைக் கரையில் நாங்கள் பிரிந்த வீட்டிற்குச் சென்றேன். எங்குந் தேடிக் கடைசியில் நம்பிக்கை இழந்து கையற்றிருக்கையில் இங்கே உங்களைக் கண்டேன்'' என்றாள்.

பிறகு தன் தந்தை இறந்து விட்டதாகவும், பிதிரார்ச்சிதமான வீட்டை அந்நியர்க்கு வாடகைக்குக் கொடுத்துவிட்டுச் சிறிய தாயாருடன் இந்தக் கிராமத்தில் வசிப்பதாகவும் கூறினாள்.

எமக்கிடையில் இரகசியம் எதுவும் இல்லை என்னும் இன்ப உணர்வில் நினைத்தவர்களாய் இருவரும் உள்ளே சென்றோம்.

இது, சுவர்ணகுமாரி கோசல் எழுதிய "The Sorrows of Life" என்பதைத் தழுவி வரையப்பட்டது.

# சிவபெருமானின் திருமேனி நிலை

(டர்பன், சரஸ்வதி சபைத்தலைவர்
திரு. ச. முனிஸ்வாமி பிள்ளை அவர்கள்.)

பிறப்பற்ற நமது பரம பதியாகிய சிவபெருமானுக்கு உரியதான ஒரு உருவமில்லை; அத்தயாநிதி எவ்வெவர் எவ்வெவ்வுருவமாக உபாசனை செய்கின்றார்களோ, அவரவர்க்கு அவ்வத் திருமேனியாகவிருந் தருள் வழங்குவர். அவரை வழிபடுவோரின் அன்பின் அளவுக்குத் தக்கவாறு அவ்வம் மூர்த்திகளில் வெளிப்பட்டு அருள் சுரத்தலால், அவரை வணங்கும் மெய்யடியார்களின் அன்பே அவரது உருவமும், அவ்வடியார்களின் மனமே ஆலயமுமாகும். இதுபற்றியே, காரைக்கா லம்மையாராலியற்றப் பெற்ற "அற்புதத் திருவந்தாதி" என்னும் பிரபந்தத்தில்,

"வானத்தா னென்பாரு மென்க மற்றும்பர் கோன்
றானத்தா னென்பாருந் தாமென்க—ஞானத்தான்
முன்னஞ்சத் தாலிருண்ட மெய் யொளிசேர் கண்டத்தான்
என் னெஞ்சத் தானென்பன் யான்."

என்று கூறியருளினார்.

இன்னும் அன்பே சிவம் என்பதற்கு மெய்ஞ்ஞானமாகிய திருமூல நாய னார் தாமியற்றிய திரு மந்திரத்தில்,

"அன்புஞ் சிவமுமிரண்டென் பரறிவிலார்
அன்பே சிவமாவதாரு மறிந்திலர்
அன்பே சிவமாவதாரு மறிந்த பின்
அன்பே சிவமாயமர்ந் திருப்பாரே."

என்று திருவாய் மலர்ந்தருளினர். எமது பசுபதியானவர் "இறப்பெதிர் நிகழ்வு" என்னும், முக்காலங்களிலும், என்றும் ஒரே படித்தாய் நிலை பெற் றிருத்தலினாலும், மனவாக்குக் காயம் என்னுந் திரிகரணங்களாலும் சுத்தி யுடைய மெய்யடியார்க்கு, "கன்றுக் கிரங்குந் தலையீற்றுப் பசுப்போல்" அருள் சுரத்தலாலும், உண்மையே அவர் உருவம் எனவும், தமக்கு ஒருவரும் அறிவிப்பாரின்றி அறிவுக்கறிவாய் எல்லாவுயிர்கட்கும் உணர்த்தும் பேரறிவா யிருத்தலினால் ஞானமே அவர் உருவம் எனவும், எஞ்ஞான்றும் வரம்பிலின்ப முடையாராம் தம்மை வந்தித்த ஆன்மாக்கட்கு நித்தியானந்த முதவுதலினால் ஆனந்தமே அவர் உருவமென்றும், சொல்லப்படும்; அது பற்றியே அவரைச் "சச்சிதானந்த உருவன்" என ஆன்றோர் கூறுவர். கடவுள் எங்கும் நீக்கமற நிறைந்து சர்வ வியாபியாயிருத்தலினால், எல்லாப் பொருள்களும் அவரது திருமேனியாகும். நிலம், நீர், வளி, தீ, விசும்பு, நிலா, பகலோன், ஆன்மா

ஆகிய இவ்வெட்டும் அவர் திருமேனியாயிருத்தலினால் அவரை அட்டமூர்த்தி என்பர். இதனாலன்றோ பிருதிவி ரூபமான சொரூப வணக்கத்தையும், யாகாதி முதலிய அக்கினி வணக்கத்தையும், கங்கை முதலிய அப்பு வணக்கத்தையும், சூரிய பூசை, சந்திர பூசை யென்னு மிரு வணக்கங்களையும், அடியார்களைக் கடவுளாகப் பாவித்து வழிபடும் ஆன்ம வணக்கத்தினையும் மெய்யன்பர்கள் சந்ததமும் கைக்கொண்டொழுகி வருகின்றார்கள். இங்ஙனம் கடவுள் அட்டமூர்த்தமாக நீக்கமற நிறைந்திருப்பினும், அவையே தாமாகாமல் அவற்றின் வேறான முழுமுதற் பொருளாயுமிருக்கின்றார். அங்ஙனம் கடவுள் தமக்கென ஒரு உருவமுமில்லாதவராகவும், நமது உணர்வுக் கெட்டாதவராகவுமிருத்தலால், அவரை நாம் எப்படி வழிபடுவது என ஒரு ஆட்சேபம் நிகழுமாயின், அவர் தமக்கென ஒரு நாமமும், ஒரு உருவமும் இல்லாதவராயும், ஆன்மாக்களைப் பிறவிச் சாகரத்தில் நின்றுங் கரையேற்றவேண்டுமென்று திருவுள்ளத்தில் முகிழ்த்த பெருங்கருணையினால், பற்பல அருள் வடிவங்களைத் தாங்கிப் பஞ்சகிருத்தியங்களையும் நடாத்துகின்றார். கருணையே திருமேனியாகக் கொண்ட அப்பரம்பொருள் தம்மின் வேறாகாது அக்கினியிற் சூடுபோன்ற அபின்ன சக்தி அல்லது வல்லமை என்னும் தேவியையுடையவராய், ஆன்மாக்களுக்கெல்லாம் தந்தையும் தாயுமாயெழுந்தருளியிருந்து வேண்டிய வேண்டியாங்கு அருள் புரிகின்றார். அப்பரமேட்டி ஆன்ம கோடிகளுக்குத் தந்தையுந் தாயுமாகுந் திருமேனி கொள்ளாவிடில், அவருக்குப் படைப்பு முதலிய தொழில்களிரா. இவ்வுண்மையினை யறியாத அஞ்ஞானிகள் கடவுளைத் தந்தையுந்தாயுமாக வழிபடும் மெய்ஞ்ஞானிகளைப் பார்த்து, உங்கள் கடவுளுக்கு மனைவி மக்களும் உளரோ! என எள்ளி நகையாடுகின்றார்கள். இவர்கள் கடவுளைத் தந்தையாக மாத்திரம் எண்ணி வழிபடுவர். அந்தோ ! இவர்கள் மதி இருந்தவாறு என்னை ? தாயின்றித் தந்தையில்லை ஆதலாலும், தந்தையைக் காட்டிலுந் தாய்க்கே மக்களிடத்தில் அன்பு அதிகமாதலினாலும், தாயிலும் மிக்க தயாநிதியாகிய சிவபெருமானைத் தாயாயுந் தந்தையாயும் வழிபடுதலே சாலச் சிறப்புடைத்தாம். அப்பெருமான் எமக்கு அன்னை தந்தை மாத்திரமாகவா இருக்கின்றார். எமக்கு இருவினையொப்பும் மலபரிபாகமும் வரும்போது ஆட்கொள்ளும் ஞானசாரியராயுமிருக்கின்றார். நாம் தீவினைகளைச் செய்யப் பிரயத்தனப்படும்போது, மனச் சாட்சியாயிருந்து அவற்றைச் செய்யவேண்டா மெனத் தடுக்கும் தோழனாகவுமிருக்கின்றார்.

அவ்விறைவனுக்குச் சோம சூரியாக்னி கண்களாகவும், வாயு மூச்சாகவும், சகல உலகங்களும் சரீரமாகவும், உயிர்களெல்லாம் உறுப்புகளாகவும், திக்குகள் ஆடையாகவும் அமைந்திருக்கின்றன.

அன்பார்ந்த சகோதர சகோதரிகளே! அறவாழி யந்தணராகிய சிவபிரான் தமதடியாரை யாட்கொள்ளக் கொண்ட அருள் வடிவங்கள் அளப்பிலவாயினும், சிற்றறிவுஞ் சிறு தொழிலுமுடையராகிய நம்போலியர் வழிபட்டுய்யும் வண்ணம் கொண்ட திருமேனிகள் குருலிங்க சங்கமம் என்னும் மூன்றுமாம். பாலானது பசுவின் சரீரம் முழுதும் வியாபித்திருப்பினும், அதன் முலை வழியாகவே சுரப்பது போல, கடவுளுக்கும் குருலிங்க சங்கமமென்னும் மூன்றிடங்களுமே அடியார்கள் எளிதில் வழிபட்டு அவர் அருளைப் பெறுதற்குரிய முக்கிய இடங்களாயிருக்கின்றன. ஆதலால் அவ்விடங்களிலே நாம் அநவரதமும் பக்தி செலுத்தி பழிபட்டு உய்யக்கடவோமாக.

# ஜீவசத்துப் பொருள்கள்.

(Vitamins.)

(வி. சங்கரையர்.)

(302-ம் பக்கத் தொடர்ச்சி)

### 3. ஜீவசத்துப் பொருள்களின் ஆராய்ச்சி.

(1) பீ:—இதன் குறைவினால்தான் இக்காலத்தில் மரணவிகிதம் அதிகம். இதன் குறைவினால் பெரிபெரி (Beriberi) என்னும் வியாதியும், பெல்லக்கிரா (Pellagra) வாதம், பக்ஷவாதம் முதலியவையும் பைத்தியம் மூளை சம்பந்தமான வியாதிகளும் உண்டாகின்றன.

சுமார் 50-வருஷங்களுக்கு முன் பெரிபெரி என்ற வியாதி சாதாரணமாக ஜப்பானிலும், கிழக்குச் சைனாவிலுமுள்ள பல்லாயிரம் ஜனங்களைக் கொள்ளை கொண்டன. நாளுக்குநாள் மரணவிகிதம் அதிகப்பட்டன. உடனே உலகத்தின் பற்பல பாகங்களிலிருந்தும் வைத்திய சாஸ்திர ஆராய்ச்சி நிபுணர்கள் அங்கு வந்து சேர்ந்தனர். அவர்கள், தவிடு நீக்கப்பட்ட அரிசி, கோதுமை முதலியவைகளை சமையல் செய்து சாப்பிடுவதாலேயே இந்த பெரிபெரி வியாதி உண்டாயிற்று என்று கண்டுபிடித்தனர். ஆகையால் வெள்ளைக் கோதுமை, வெள்ளை அரிசி முதலியவைகளை விரும்பாதீர்கள்; நெல்லை மிஷினில் குத்தவிடாதீர்கள். கைக்குத்தலே சிலாக்கியம். உடலுக்கும் நன்மை; நம் தேச சகோதரிகளுக்கும் வேலை கிடைக்கும். முதலில் பலர் இவ் வபிப்பிராயத்தை எதிர்த்தனர். ஆனால் இப்பொழுது இந்தக் கீழ்த் தேசங்களாகிய ஜப்பானிலும் கீழ்ச் சீனாவிலும் வெள்ளைக் கோதுமை, வெள்ளை அரிசி இவைகளைக் கடைகளில் விற்பதிலிருந்து கவர்ன்மெண்டார் வியாபாரிகளைத் தடுத்திருக்கிறார்கள். பெல்லகிரா என்னும் நோய் ஸ்பெயின், இட்டாலி, முதலிய தேசங்களில் காணப்பட்டன. இதற்குக் காரணமும் பீ ஜீவஸத்துப் பொருள் குறைவு என்று கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. பீ ஜீவஸத்துப் பொருளின்மையால் நரம்புத் தளர்ச்சி ஏற்படுகிறது. இதனால் மூளை கெட்டுப்போய் பைத்தியமும் பிடிக்கலாம். வாதம், பக்ஷவாதம், முடக்குவாதம் முதலியவைகளுமுண்டாகலாம்; அஜீர்ணம், சர்மத்தின்மீது வட்டமாக சிவப்புத் தடிப்பும் உண்டாகின்றது.

(2) ஏ:—இந்தப் பொருளில்லாவிட்டால் கண்குருடு முதலியவைகள் உண்டாகும் என்று 1915-ல் டேவிஸ் என்பவரால் கண்டுபிடிக்கப்பட்டது.

ரசாயன கர்மசாலை (Laboratory) யில் சில ஜந்துக்களை அவர் பரீக்ஷை செய்து கண்டுபிடித்தார். நம்முடைய சரீரத்துக்கு ஏ ஜீவஸத்துப் பொருளை சேகரித்துக் கொள்ளும் சக்தியுண்டு. ஆகையால் சிறுவயதில் ஏ ஜீவசத்துப் பொருள் அடங்கிய ஆகாரங்களை சாப்பிட்டால் அதன் சக்தி மரணபர்யந்தம் நம்மை காக்கின்றது. நம் முன்னோர்கள் தங்கள் சிறு வயதில் தயிர் சேர்த்துப் பழையதைக் காலையில் சாப்பிட்டு வந்தமையாலேயே அதிக தைரியசாலிகளாகவும் நாம் காலையில் காப்பி இட்டலி சாப்பிடுகின்றதாலேயே அதைரியசாலிகளாகவும் இருக்கக் காரணம். சிறுவயதில் ஏ ஜீவஸத்துப் பொருள்கள் சாப்பிட்டு பழக்கமானவர்களை ஒருநாளும் காலரா மலேரியா முதலிய தொத்து வியாதிகள் தாக்கா. ஏ ஜீவஸத்துப் பொருள்களுக்கு தொத்து வியாதிகளைத் தடுக்கும் சக்தியுண்டு.

(3) ஸீ ஜீவஸத்துப் பொருள்கள்:—சுமார் 100-வருஷங்களுக்கு முன் கப்பல் யாத்திரீகர்களுக்குண்டாகும் ஸ்கர்வி என்ற வியாதி ஸீ ஜீவசத்துப் பொருள்கள் அடங்கிய ஆகாரங்களால் தீருமென்று கண்டுபிடித்தார்கள். இந்த வியாதிக்கு முதலில் வாய்ப்புண், பல் ஆடுதல், கை கால்களில் சிரங்கு இவைகள் தோன்றும். இந்த நோய் உண்டாவதால் அனேகர் கை கால்களைக் கொஞ்சம் கொஞ்சமாக இழக்கவும் நேரிடும். ஏ ஜீவஸத்துப் பொருள்களை சேகரித்து வெகு காலம் செலவு செய்யாமல் வைத்துக் கொள்ளும் சக்தி நம்முடைய தேகத்திற்கு இருப்பது போல், ஸீ ஜீவஸத்துப் பொருள்களை வைத்துக் கொள்ளும் சக்தியில்லாமையால் ஸீ ஜீவஸத்துப் பொருள்கள் அடங்கிய ஆகாரத்தை நாம் அடிக்கடி உணவுடன் கலந்து சாப்பிட வேண்டும்.

(4) டீ ஜீவஸத்துப் பொருள்:—இது முக்கியமாக சூரியகிரணத்தில் இருந்தே கிடைக்கிறது. இப்பொழுது சட்டை முதலியவைகள் அணிந்து கொள்வதால் டீ ஜீவசத்துப் பொருள்கள் கிடைக்கும் வழி அடைபட்டு விடுகிறது. ஆகையால் எலும்பு வளர்ச்சிக்குத் தடை ஏற்படுகிறது. இதனாலேயே குழந்தைகளுக்கு கணைச்சூடு உண்டாகாமலிருக்க குழந்தைகளை ஜாஸ்தியாக சூரியகிரணங்கள் படும்படியான இடத்தில் போட்டு வைக்கவேண்டும். க்ஷயத்துக்கும் டீ ஜீவசத்துப் பொருளின்மையே காரணம். டீ ஜீவசத்துப் பொருள் சூரியகிரணத்தி லிருந்துதான் கிடைக்கும். ஆனால் முட்டையின் வெள்ளைக் கருவிலும், மீனெண்ணெயிலும், பாலிலும் வெண்ணெயிலும் கொஞ்சம் இருக்கின்றன.

5. இ ஜீவசத்துப் பொருள்:—நவதானியங்களிலும், பச்சையிலைகளிலும் ஜீவசத்துப் பொருள்கள் இருக்கின்றன.

### 4. முடிவுரை.

கோதுமை மாவால் ரொட்டி செய்யலாம். ஆனால் அப்பொழுது தயாரித்த மாவே நன்று. முன்னாடியே தயாரித்த மாவினால் செய்யப்படும் ரொட்டி மிகவும் கெடுதலானதே. குழந்தைகளுக்கு எண்ணெய் தேய்த்து சூரிய வெளிச்சம் மேலேபடும்படி விட்டுவைக்க வேண்டும். இதனால் கணைநோய் அணுகாது. நன்றாய் தீட்டப்படாததான அரிசியே நல்லது. அதாவது மிஷினில் குத்திய அரிசியை உண்ணக்கூடாது. வேப்பங் குச்சியாலேயே பல்லை விளக்கு. கரி, சாம்பல், மண் இவைகளால் பல் விளக்காதே. வேப்பங் குச்சியால் பல் தேய்த்தால் பல் சுத்தப்படுவதோடுகூட இரத்தத்திலுள்ள விஷப் பூச்சிகளும் கொல்லப்படுகின்றன.

# விசித்திர விநோதம்



சுப்பையா:—"என் தீர்வை விஷய மாக, அந்த கலெக்டர் ஆபீஸ் குமஸ்தா வுக்கு ரூ. 10 கொடுத்தால்தான் காரியமாகு மென்று சேவகன் சொல்லுகிறான். தாங் கள் அனுபோகஸ்தராச்சுதே. அதைப்பற் றித் தங்களுடைய அபிப்பிராயம் என்ன?"

பெரியவர்:—"அப்படிப் பைத்தியக் காரத்தனமாகப் பணத்தைக் கொடுத்து விடாதே. ஒரு கட்டு வாழை இலை, கத்த ரிக்காய், வாழைக்காய், கொத்தவரங்காய், பாகற்காய், பீர்க்கங்காய், புடலங்காய், அவ ரைக்காய் இவைகளில் வகைக்குப் பத்துப் பலம் வாங்கி, குமஸ்தா வீட்டிற் குப்போய் அவரில்லாத நேரம் அவர் மனைவியிடம் கொடுத்து, உன் பெயரை யும் சொல்லிவிட்டு வந்துவிடு. காரியம் முடிந்து போகும். செலவு இரண்டு ரூபாய்க்குள்ளே முடிந்துவிடும்."

***

கணவன்:—"இந்த எலக்ஷ னுக்கு நான் எவ்வளவோ பணம் செலவு செய்திருக்கிறேன். இதில் மாத்திரம் அபஜெயமானால் நான் யார் முகத்திலும் விழிக்க முடியாது. நான்று கொண்டு சாகவேண்டியது தான். அதற்கு நீ என்ன சொல் கிறாய்?"



மனைவி:-"எனக்குத் தெரிந்தது, உங்கள் மோதிரத்திலுள்ள வைரத்தை விழுங்கி விடுவதுதான் சுலபம்."

***

பிச்சைக்காரன்:—"தருமம் கொடுங்கள் ஐயா!"

பெரியமனிதர்:—"காலணுக் கொடுக்கிறேன். ஆனால் பத்து ரூபாய் நோட்டுக்குச் சில்லரை வேணும்."



ஜமீன்தார்:—"நீ ஒரு ரூபாய் செலவு செய்ததைப் பிரமாதமாகப் பேசிக்கொள்கிறாயே உன்னுடைய செலவுக்கும் என்னுடைய செலவுக்கும் ஏணி வைத்தாலும் எட்டுமா? உனக்கு ஒரு ரூபாயும் எனக்கு நூறு ரூபாயும் சரி."

மற்றவர்:—"அப்படியானால் ஒரு ரூபாய்க்குச் சில்லறை கொடுங்கள்."

***

மனைவி:—"என்ன! ஆபீசுக்குப் போகாமல், படுக்கையை விரித்துப் படுத்திருக்கின்றீர்கள். உங்களுக்கு உடம்புக்கு என்ன?

கணவன்:—"நான் திடீரென மரணமடைய நேரிடுமென்று படுத்துக் கொண்டேன்."

மனைவி:—"ஏன்?"

கணவன்:—"ஜீவகாலம் வரை உழைக்கக்கூடியதென்று கடைக்காரன் சொன்ன கடிகாரமொன்று போன வாரம் வாங்கினேன். அது இன்று காலை திடீரென நின்றுவிட்டது."



***

மானேஜர்:—"எல்லாரையும் விட இன்றைக்கு நீ மிகவும் தாமதித்து வந்தாய்-இப்பொழுது எல்லோருக்கும் முந்திப் புறப்படுகிறாயே ஏன்?"

குமாஸ்தா:—"இரண்டு வேளைகளிலும் தாமதம் நேரக்கூடாது என்பதற்காகவே."

***

ஒருவன்:—"ஐயா! நான் மிகவும் பலவீனமாய் இருக்கிறேன்"

டாக்டர்:—"அப்படியா? ஆனால் "டானிக்" சாப்பிடு."

ஒருவன்:—"வெகு நாட்களாய் 'டானிக்' சாப்பிட்டுக்கொண்டு வருகிறேன்-ஒரு பர்லாங்கு கூட நடக்க முடியவில்லை."

டாக்டர்:—"நடக்க முடியாவிட்டால் மோட்டாரில் ஏறிக்கொண்டுபோ"

உபாத்தியாயர்:—"நம்முடைய காதிற்கும் கழுதையின் காதிற்கும் வித்தியாசம் என்ன ?"

கிராமக் கணக்கப்பிள்ளை மகன்:—"நம்முடைய காதில் பேனா சொருகிக் கொள்ளலாம். கழுதை அப்படிச் செய்வதில்லை."

***

ராமன்:—"நான் வாங்கிக்கொண்டு வந்த ஆமை முந்நூறு வருஷம் ஜீவிக்கும் என்றாயே—அப்போதே இறந்து போய் விட்டது."

சோமன்:—"அதற்கு முந்நூறு வருஷம் பூர்த்தியாகி விட்டது!"

***



வயிற்று நோவுக்கு ஆஸ்பத்திரியில் ஆப்பரேஷன் செய்து கொள்ளப் போய்த் திரும்பும் தகப்பனாரைப் பார்த்து.

மகன்:—"அப்பா! என்ன வெறுங் கையோடு திரும்பி வருகின்றீர். குழந்தை எங்கே ?"

***

பத்திரிகா நிருபர்:—"தாங்கள் இளமையில் கொண்டிருந்த ஆசைகளெல்லாம் நிறைவேறினவா ?"

பெரியமனிதர்:—"நிறைவேறின. சிறுவயதில் என் தாயார் எனக்குத் தலைவாரி விடும்போதெல்லாம்—மயிரில்லாமலிருந்தால் நன்றாயிருக்கும் என்று பல தடவைகளில் எண்ணியதுண்டு. இப்போது அப்படியே தலைமயிரெல்லாம் உதிர்ந்து போய் விட்டன."

***

இரண்டுபேர் வழிப்பிரயாணம் செய்தார்கள். ஒருவன் கால் நழுவிக் கிணற்றில் விழுந்து விட்டான்.

மற்ற பேர்வழி:—"ஐயோ கிணற்றில் விழுந்து விட்டாயா? நான் இப்போது என்ன செய்வது ?"

விழுந்தவன்:—ஒரு கயிற்றைக் கொண்டுவந்து போடு. நான் அதைப்பற்றிக்கொண்டு ஏறி விடுகிறேன்."

மற்ற பேர்வழி:—(சிறிது நேரம் கழித்து வந்து) இந்தப் பாழும் ஊரில் கயிறு அதிக விலையாயிருக்கிறது. அதனால் வாங்கவில்லை. நம்ம ஊரிலானால் வெகுமலிவு.



மனைவி:—அடுத்த அறையில் ஏதோ திருடர் அரவங் கேட்கிறது. நீங்கள் விழித்திருக்கின்றீர்களா?

கணவன்:—"இல்லை."

***

வியாபாரி:—"இந்த ரூபாய் செல்லாது. 1840-ம் வருஷத்து ரூபாய்!"

ஒருவன்:—"செல்லாமல் என்ன ஐயா? செல்லாமலிருந்தால் அந்தக் காலத்திலிருந்து இதுவரை யாரும் பார்க்காமலிருந்திருப்பார்களா?"

***

மகன்:—நேரடியான வரிக்கும் மறைமுகமான வரிக்கும் வித்தியாசம் என்னப்பா?"

தந்தை:—"நான் உனக்கு நேரில் கொடுக்கும் பணத்திற்கும், நீ என் ஜேபியிலிருந்து எடுத்துக்கொள்ளும் பணத்திற்கும் என்ன வித்தியாசமோ அந்த வித்தியாசமே."

# சிலோன் நேயர்கட்கு ஒரு வேண்டுகோள்.

—:(o):—

சிங்கப்பூர், பினங்கு முதலிய வெளிநாடுகட்கு அனுப்பப்படும் வி. பி. பார்சல்கள் வாங்கப்படாமல் திருப்பியனுப்பப்பட்டால் இரண்டுமடங்கு வி. பி. சார்ஜ் கட்டி அவைகளைப் பெற்றுக்கொள்ளவேண்டி யிருப்பதுபோலவே சிலோனுக்கு அனுப்பப்படும் பார்சல்களும் திருப்பி அனுப்பப்பட்டால் இரண்டு மடங்கு சார்ஜ் கட்டிப் பெற்றுக்கொள்ளவேண்டும் என்று தபால் அதிகாரிகள் உத்தரவிட்டிருக்கின்றனர். ஆதலால் சிலோன் நேயர்கள் தங்கட்குத் தேவையான சாமான்கட்கு ஆர்டர் கொடுக்கும்போது சாமான்கட்குள்ள விலையையும், தபால் சார்ஜையும் சேர்த்து முன்பணமாக அனுப்பினால் நாங்கள் வீணாக நஷ்டமடைய நேராது என்பதை இதன்மூலம் தெரிவித்துக்கொள்ளுகின்றோம்.

மானேஜர்.

# ஆசிரியர் குறிப்புக்கள்.

## செட்டிநாட்டு இளவரசர் வெற்றி

நவம்பர் மாதம் 3-ம் தேதி வியாழக்கிழமை செட்டிநாட்டு இளவரசர் திரு. முத்தையா செட்டியார் ஏகமனதாகச் சென்னை நகரசபைத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட செய்தியை அறிந்து மகிழ்கின்றோம். திரு. செட்டியாரின் குடும்பப் பெருமையைப் பற்றியும் அவருடைய தந்தையார் ராஜா சர். அண்ணாமலை செட்டியாரின் கல்விக் கொடையைப் பற்றியும் தென்னாட்டு மக்கள் நன்குணர்வர். இப்போது சென்னை நகர சபைத் தலைவராக வந்திருக்கும் திரு. முத்தையா செட்டியார் ஆண்டில் இளைஞராயினும் அனுபவத்திலும் அறிவாற்றலிலும் முதியவர். பொதுநலத் தொண்டில் தந்தையைப் போலவே பெரிதும் வேட்கையுடையவர். இவருக்கு முன்னர் நகரசபைத் தலைவராக வீற்றிருந்து எல்லாருடைய அன்புக்கும் ஆதரவுக்கும் பாத்திரராக விளங்கிய ஸ்ரீமான் டி. எஸ். ராமசாமி ஐயர் பொதுவாக ஏழை மக்களிடத்திலும் சிறப்பாகத் தாழ்த்தப்பட்ட மக்களிடத்திலும் அனுதாபமுடையவராய்ப் பல நன்மைகளைச் செய்திருக்கிறார். திரு. செட்டியார் ஒரு குறிப்பிட்ட கக்ஷியைச் சார்ந்தவராயினும் நகர சபையில் கக்ஷி வேற்றுமை பாராட்டாது திரு. ஐயரவர்களைப்போலவே நகர முன்னேற்றத்திற்கான நற்றொண்டாற்றுவார் என்றே நம்புகின்றோம். "நான் ஒரு கக்ஷியைச் சேர்ந்தவன் என்ற எண்ணம் உங்களுக்குத் தோன்றாமல் இருக்கும் முறையில் நடந்துகொண்டு தொண்டாற்றுவேன்" என்று அவர் அங்கத்தினர்கட்கு உறுதி கூறியதை அறிந்து நாம் அவரைப் பெரிதும் பாராட்டுகின்றோம். செட்டி நாட்டு இளவரசரைப் போன்ற பெருஞ் செல்வர்கள் மனம் வைத்தால் தாழ்த்தப்பட்ட மக்களைப் பிடித்திருக்கும் கலி சூரியனைக் கண்ட பனிபோல் விலகும் என்பது எமது நம்பிக்கை. பெரும் பொறுப்பேற்றுள்ள இளைஞர் திரு. முத்தையா செட்டியாருக்கு எமது வாழ்த்து உரிமை செய்கிறோம்.

## ஏழைகள் துயரம்!

வயிற்றுப் பிழைப்பின் பொருட்டு, கடல் கடந்து வெளிநாடுகட்குச் சென்று ஏமாந்து, மீண்டும் தாய்நாடு திரும்பும் ஏழை மக்களின் தொகை நாளுக்கு நாள் வளர்ந்துகொண்டு வருகிறது. இங்கேயே இருந்து வாழ்க்கை நடத்தும் மக்களின் துன்பமோ எல்லையற்றது என்பது கண்கூடு. அல்லும் பகலும் உழைத்தாலும் அரை வயிற்றுக் கஞ்சிக்கும் வழியில்லாமல் திண்டாடும் ஏழை மக்கள் கோடிக்கணக்கானவர்கள் இன்று நமது நாட்டில் வசித்து வருகின்றனர். இவர்களுடன் வெளிநாடு சென்றவர்களும் வந்து சேர்ந்து கொண்டால் நிலைமை எப்படியிருக்கும் என்பதை நேயர்கள் சற்றே சிந்திப்பார்களாக. நாகரிகம் மிக்க மேனாடுகளில் வேலையில்லாத் திண்டாட்டத்தை நீக்கும் பொறுப்பு அரசாங்கத்தைச் சார்ந்ததாயிருக்கிறது. இந்நாட்டில் ஏழை மக்களைப் பற்றி ஏன் என்று கேட்பாரும் இல்லை. பிஜி முதலிய வெளிநாடுகளிலிருந்து இங்கு வந்திருக்கும் மக்களின் தற்கால உதவிக்காக இந்திய அரசாங்கத்தார் இரண்டாயிரம் ரூபாய் அளிப்பது என்று தீர்மானித்திருக்கிறார்களாம். நல்ல உதவி! ஏழைகள் மீது கருணை உள்ள அரசாங்கம் இவ்வற்ப உதவி செய்வதை இழிவாகவே நினைக்கவேண்டும். அவரவர்களுடைய ஊர்

கட்குச் செல்ல வழிப்பிரயாணச் செலவிற்கு மட்டும் இத்தொகை உத்தேசிக் கப்பட்டதாம். கிராமங்கட்குச் சென்று இவ்வேலைகள் செய்யும் காரியம் என்ன என்று அரசாங்கத்தாரை வினவுகின்றோம். இந்தியர் வெளிநாடுகட்குச் சென்று குடியேறித் துன்பமின்றி வாழ்க்கை நடத்தவும் நமது சர்க்கார் போதிய உதவி புரிவதில்லை, இங்கும் உதவி புரிவதில்லை என்றால் அவர்கள் கதி என்ன என்று நமக்கு விளங்கவில்லை. அரசாங்கம் மனம் வைத்தால் ஏழைகட்கு வாழ்வுண்டு என்பதே நமது உறுதியான நம்பிக்கையாகும்.

## தற்காலக் கல்விமுறையின் கேடு

இக்காலக் கல்விமுறை அமைப்பு மக்கள் வாழ்க்கைக்குப் பயன் அளிப்பதில்லை என்னும் உண்மை பல்வேறிடங்களில் நிகழ்ந்த ஒவ்வொரு பட்டமளிப்புவிழாப் பிரசங்கத்திலும் தெளிவாக்கப்பட்டு வந்திருக்கிறது. சென்னை கல்வி இலாகாத் தலைவரான லிட்டில் ஹேல்ஸ் என்பவர் சென்றமாதம் அண்ணாமலை சர்வ கலாசாலைப் பட்டமளிப்பு விழாவில் நிகழ்த்திய சொற்பொழிவும் இவ்வுண்மையை நன்கு விளக்குவதா யிருக்கிறது. ஆங்கிலக் கல்வியைப் போதிப்பவர்கள் தங்களை மேதாவிகள் என்றும், கல்வியற்ற கிராமவாசிகளை இழிந்தவர்கள் என்றும் கருதிக் கொள்ளுவது தவறு என்று லிட்டில்ஹேல்ஸ் விளக்கியுள்ளார். அநேக விஷயங்களில் ஆங்கிலக் கல்வி கற்றவரைவிடச் சாமானிய மனிதரே அறிவுக்கூர்மை காட்டி யிருக்கின்றனர் என்பதற்குப் பல உதாரணங்கள் உண்டு என்று இவர் கூறினர். உழவுத்தொழிலை வெற்றியுடன் நடத்துபவர்கள் பல விஷயங்களைக் கற்றறிந்தவர்களைவிட விசேஷ நன்மை செய்கிறார்கள் என்று இவர் தெரிவித்தார். இதனால் தற்காலக்கல்வி முறையானது படித்தவர்களை அனுபவ முறையினின்றும் பிரித்து வைத்து விடுகிறது என்னும் உண்மையை ஊகித்தறியலாம். பிறமொழி வாயிலாகக் கற்பிக்கப்படும் கல்வி சரியான பயன் அளிப்பதில்லை. தற்காலக் கல்வி பழைய கல்வி முறைகளை அடியுடன் மாற்றிவிட்டது. இந்நவீனக் கல்வி விவசாயிகட்கோ அல்லது கிராமவாசிகட்கோ எத்தகைய நன்மையும் செய்வதில்லை என்று லிட்டில் ஹேல்ஸ் கூறியது உயர்வு நவிற்சி அல்ல—உண்மையேயாகும். நாட்டுமொழிகளின் வாயிலாக அறிவு படைத்தவர்கட்கும் ஆங்கிலக்கல்வி கற்றவர்கட்கு மிடையில் பெரிய பள்ளம் விழுந்து கிடக்கிறது. அண்ணாமலை சர்வகலாசாலை ஓரளவு நாட்டு மொழிகட்கு முதன்மை கொடுத்து வருகிறது. ஆனால் எல்லா வித்தைகளையும் நாட்டுமொழி வாயிலாகக் கற்பிக்க ஏற்பாடு செய்தாலன்றித் தக்க பயன் எதிர் பார்க்க முடியாது. கல்வி இலாகாத்தலைவராகிய லிட்டில் ஹேல்ஸ் அவர்களே தற்காலக் கல்வி முறையைக் குறித்து இவ்வாறு அபிப்பிராயம் தெரிவிப்பதால் இதில் ஏதோ பெரிய குறை உண்டு என்பதை ஒவ்வொருவரும் உறுதியாக நம்பவேண்டும். இக்காலத்தில் தற்காலக்கல்வி முறையில் குறைகள் உண்டு என்று தெரிவிப்போரின் தொகை வளர்கிறதேயொழியக் குறைகளை நீக்கித் தக்க கல்வி முறையை ஏற்படுத்துவோர் ஒருவரையேனும் காணோம்.

## வைசிராயின் பதில்

காந்தியடிகளை விடுதலை செய்யவேண்டும் என்று மௌலானா ஷௌகத் அலி வைசிராய் பிரபுவை வேண்டினர். அதற்கு வைசிராய்ப் பிரபு மாமூல் பதிலே கொடுத்துவிட்டார். சட்ட மறுப்பை நிறுத்தினலொழியக் காந்தியடி

களை விடுதலை செய்ய முடியாது என்பது வைசிராய் கொடுத்த பதிலின் சாரம். இதைக்கண்டு மௌலானாவின் மனம் வருந்தியது. காந்தியடிகள் வெளியிலிருந்தால் வகுப்பு ஒற்றுமைக்கு மிகவும் உதவியாயிருக்கும் என்பது அவருடைய நம்பிக்கை. ஆனால் காந்தியடிகளைக் காணும் உரிமைகூட அவருக்குக் கிடைக்கவில்லை. இந்தியப் பிரச்சினையைத் திருப்திகரமாகத் தீர்த்து வைக்கும் நோக்கம் இன்றிச் சீமையில் எத்தனை வட்டமேஜை மகாநாடுகளைக் கூட்டினாலும் பயன் விளையப்போவதில்லை. காந்தியடிகளை விடுதலை செய்து, அவசரச் சட்டங்களையும், அடக்கு முறைகளையும் அடியுடன் விலக்கி, இங்கிலாந்து இந்தியாவின் கோரிக்கைகளை நிறைவேற்றி வைக்கும் காலம் விரைவில் கைகூடாமற் போகாது என்பது மட்டும் உறுதி.

## "ஆடம்பரம் வேண்டாம்"

வடக்கு அயர்லாந்தில் புதிதாக நிருமாணம் செய்யப்பட்டுள்ள பார்லிமெண்டு கட்டடத்தையும், சர்க்கார் கட்டடங்களையும் இம்மாதத்தில் வேல்ஸ் இளவரசர் திறந்துவைக்கக் கேட்டுக்கொள்ளப் பட்டபோது தமது விஜயத்தை ஒட்டி அங்குள்ள கவர்னருக்கு அவர் அறிவித்திருப்பதாவது:—

"நான் பெல்பாஸ்டுக்கு விஜயம் செய்வதை யொட்டித் தற்போதைய நிலையில் அத்தியாவசியமான செலவைத் தவிர ஒரு தம்பிடியேனும் அதிகச் செலவு செய்யக்கூடாது, உங்கள் அன்பு ஒன்றே எனக்குத் தேவை. கட்டடங்களை அழகாக அலங்காரம் செய்வதன் மூலம் நான் உங்கள் அன்பை அறிந்துகொள்ளுவது முடியாத காரியம்."

வேல்ஸ் இளவரசரின் இவ்வற்புத அழகிய உபதேசம் நமது நாட்டு அதிகார தேவதைகளின் செவிகளில் விழுமா? தரித்திர தேவதை தாண்டவமாடும் நமது நாட்டில் சுற்றுப்பிரயாணம் செய்யும் மந்திரிமார்கட்கும் கவர்னர்கட்கும் நடைபெறும் உபசாரம் ராஜோபசாரமாகும். இத்தகைய உபசாரம் தேவை இல்லை என்று இளவரசரைப்போல் எவரும் இதுகாறும் கூறியிருப்பதாக எமக்குத் தெரியவில்லை. ஆனால் ஆடம்பர உபசாரம் நடத்துமாறு முன்னேற்பாடு செய்துகொண்டு எழுந்தருளும் கனவான்கள் பலர் இருப்பது பகிரங்க ரகஸியம். வேல்ஸ் இளவரசரைப்போல் உண்மைத் தேசியப்பற்றும் சிக்கன உணர்ச்சியும் இருப்பவர்கள் அவர் வழியைப் பின்பற்றுவார்கள் என்பதில் ஐயம் இல்லை. ஆனால் நமது நாட்டு அதிகாரவர்க்கத்திற்கு அத்தகைய நல்லுணர்வு உதயமாகுமா?

## தனித் தபால் ஏற்பாடு

பம்பாய் மாகாணத்தில் தனிப்பட்ட தபால் ஏற்பாடுகள் வலிமை பெற்று வருவதாகத் தெரிகிறது. மாகாணம் முழுவதிலும் இவ்விதத் தனி ஏற்பாடு பரவியிருக்கிறதாம். இதனால் தபால் இலாகா வருவாய் குறைந்து விட்டது என்றும் தெரிகிறது. அசல் தபால் விகிதத்தைக் காட்டிலும் தனித் தபால் முறையை ஏற்பாடு செய்வோர் குறைந்த விகிதத்தில் தபால்களைப் பட்டுவாடாச் செய்கிறார்களாம். இவர்கள் பஸ்களில் தபால்களை ஏற்றிக்கொண்டு போய் முறைப்படி அவைகளை உரியவர்கட்குச் சேர்த்து வருகின்றனர். அரசாங்கத்தார் தபால் கட்டணங்களை உயர்வு செய்தமையினாலேயே இத்தகைய தனிப்பட்ட தபால் ஏற்பாட்டுக்கு அவசியம் நேர்ந்தது என்று நம்புகின்றோம்.

## மகாத்மாவின் மணிமொழி

காந்தியடிகள் உண்ணாவிரதம் கிடந்தது முதல் நாட்டில் தீண்டாமை விலக்கு விஷயத்தில் ஒரு பரபரப்புக் காணப்படுவது நேயர்கட்குத் தெரியும். எங்கும் தாழ்த்தப்பட்டவர்களின் முன்னேற்றப் பேச்சே பேசப்படுகிறது. அடிகளின் உண்ணாவிரத காலத்தில் பம்பாயில் கண்ட அகில இந்திய தீண்டாமை விலக்குச் சங்கம் இப்போது வேலை செய்யத் துணிந்துவிட்டது. தீண்டாமை விலக்கின் பொருட்டுப் பலர் நன்கொடை அளிக்க முன் வந்திருக்கின்றனர். பரோடா, போர், காஷ்மீரம் முதலிய சமஸ்தானங்கள் தாழ்த்தப்பட்ட மக்கட்கு ஆயியப் பிரவேச உரிமை கிடைக்குமாறு கட்டளை பிறப்பித்திருக்கின்றன. காந்தியடிகள் எரவாடாச் சிறையிலிருந்து கொண்டே அறிக்கைகள் வாயிலாகவும், பேட்டி கொடுப்பதின் வாயிலாகவும் தீண்டாமை விலக்குப் பிரசாரம் செய்துகொள்ளலாம் என்று அரசாங்கத்தார் அநுமதி அளித்திருக்கின்றனர். அதை யொட்டி காந்தியடிகளும் தீண்டாமை விலக்குத் தொண்டாற்ற மூனைந்திருக்கிருர். தாழ்த்தப்பட்ட மக்கட்கு ஆலயப் பிரவேச உரிமை வேண்டும் என்று அடிகள் விரும்புகிருர். குருவாயூர் கண்ணன் கோவில் தாழ்த்தப்பட்ட மக்கட்கு ஜனவரிக்குள் திறக்கப்படவில்லையாளுல் மீண்டும் உண்ணாவிரதம் இருந்து உயிர்துறப்பேன் என்று தமது முதல் அறிக்கையில் குறிப்பிட்டிருக்கிருர். சமபந்தி போஜனமும், கலப்பு மணமும் தேவை என்று காந்தியடிகள் ஒப்புக்கொண்டாலும் இவ்விரண்டிற்கும் பிரசாரம் அவசியம் இல்லை என்று அவர் கருதுகிருர். இதன் நுட்பம் என்னே? திடும்பிரவேசமாக இச் சீர்திருத்தங்களில் தலையிட்டால் ஆகவேண்டிய காரியங்கள் தடைப்பட்டுப் போகும் என்பதே அடிகளின் உட்கோள். இது தீவிர சீர்திருத்தவாதிகட்கு அதிருப்தியைக் கொடுக்கலாம். ஆனால் அவர்கள் அதை நடைமுறையில் செய்து பார்த்தால் உண்மை விளங்கிவிடும். ஆப்கானிஸ்தான அரசர் அமானுல்லாவின் கதியை யாரும் இதற்குள் மறந்திருக்க முடியாது. தாழ்த்தப்பட்ட மக்களிடம் அநாசாரம் நிறைந்திருப்பதால் அவர்களைச் சமமாக வைக்க முடியாது என்பதற்குக் காந்தியடிகள் கொடுத்துள்ள விடை பொன்னேபோல் போற்றத் தக்கதாகும். "தோட்டி வேலையும் தோல்பதனிடும் வேலையும் இழிவான தொழில்கள் என்று சொல்லப்படுகின்றன. அவைகளைவிட இழிவும் அருவருப்பும் வாய்ந்த தொழில்கள் இன்னும் பலவற்றை நான் எடுத்துச் சொல்லுவேன். ஒவ்வொரு தாயும் தன் குழந்தைகள் விஷயத்தில் ஒரு தோட்டிச்சியாகவே இருக்கிருள். வைத்தியக்கல்வி கற்கும் மாணவர் ஒவ்வொருவரும் தோல்பதனிடுபவராகவே இருக்கிருர்—பிணத்தை அறுக்கிருர். இவர் செய்யும் காரியம் தூய்மை என்று கருதுகிறேம்" என்று அடிகள் எடுத்துக் காட்டும் உண்மைக்கு வைதிகர் என்ன சமாதானம் கூறுவர் என்று கேட்கின்றேம். அகில இந்திய தீண்டாமை விலக்குச் சங்கச் சார்பில் தமிழ் நாட்டிலும் பண வசூலும் பிரசாரமும் விரைவில் நடைபெறும். தமிழ் நாட்டைப் பொறுத்தவரையில் பிரசார நிலைமை என்னுகுமோ என்றே நாம் கவலைப்படுகின்றேம். சின்னுட்குமுன் சென்னை அரசாங்கம் மதுவிலக்குப் பிரசாரத்திற்குப் பல லக்ஷங்களை வீணக்கிச் சோம்பேறிகளை வளர்த்தது எல்லோருக்கும் ஞாபகம் இருக்கலாம். காந்தியடிகளின் பேரால் தீண்டாமை விலக்கின் பேரால் வசூலாகும் தொகையும் பிரசாரமும் சரியான உத்தம வழியில் பயன்படவேண்டும் என்பதே நமது பேரவா.




# நீல அறையின் மர்மம்.

(எஸ். எஸ். வாஸன்.)

(319-ம் பக்கத் தொடர்ச்சி.)

"இல்லை!—என் கையெழுத்தைப் போலவே மிகுந்த முயற்சியுடன் பொய்க் கையெழுத்து இடப்பட்டிருக்கிறது," என்று கூறிவிட்டு ஒரு சிறிய கடிதத்தில் அவர் தன்னுடைய கையெழுத்தைப் போட்டுவிட்டு அதை என்னிடங்கொடுத்து "இரண்டு கையெழுத்துக்களையும் ஒப்பிட்டுப் பாருங்கள்" என்றார். இரண்டுக்குமுள்ள வித்தியாசம் எனக்கு நன்றாய்த் தெரிந்தது.

பிறகு சேஷாசலஞ் செட்டி மேஜையின் மேலுள்ள மணியையடித்தார். ஒரு வேலைக்காரன் "இதோ" என்று சொல்லிக்கொண்டு வந்து நிற்க அவனைப்பார்த்து அவனுடைய எஜமானர் "குமாஸ்தாவைக் கூப்பிடு" என்று கட்டளையிட அவன் குமாஸ்தாவைக் கூப்பிடச் சென்றான். அடுத்த நிமிஷம் குமாஸ்தா வந்து நிற்க நான் கொண்டுவந்திருந்த கடிதத்தை அவனிடங் கொடுத்து "இது நம்முடைய கடிதந்தானா?" என்று கேட்டார். அவர் கடிதத்தை உற்றுப் பார்த்துவிட்டு "இது உங்களுடைய கையெழுத்தல்லவே!" என்று ஆச்சரியத்துடன் கூறினான்.

பிறகு சேஷாசலஞ் செட்டியவர்களுக்கு நான் எனக்கு நேரிட்டவைகளனைத்தையும் ஒன்று விடாது கூறினேன். நான் சொல்லியதை யெல்லாம் வெகு கவனமாய்க் கேட்டுக்கொண்ட பின் அவர் மிக்க ஆச்சரியப்பட்டவராய் என்னை நோக்கி "டாக்டரவர்களே! நீங்கள் சொல்லியதிலிருந்து எனக்கு என்ன தோன்றுகிறதென்றால் யாரோ சிலர் உமக்கு விரோதமாக, ஏன், உம்மைத் தொலைத்துவிடவே வேலை செய்துகொண்டு வருகின்றனர். நீங்கள் அதிர்ஷ்ட வசமாகவே இதுவரையில் தப்பித்துக்கொண்டு வந்து விட்டீர்கள். இனி மேல் நீங்கள் நிரம்பவும் ஜாக்கிரதையாக இருந்து கொள்ளவேண்டும்' என்றார்.

பிறகு நான் சேஷாசலஞ் செட்டியவர்களிடம் விடைபெற்றுக் கொண்டு நேராக ஸ்ரீ கந்தஸ்வாமி தேவாலயத்திற்குச் சென்று அக் கோயிலின் குருக்களை யழைத்து "என்னை யிதற்கு முன்னால் நீங்கள் பார்த்ததுண்டா?" என்று கேட்க அவர் "ஏதோ பார்த்த ஞாபகமாயிருக்கிறது. பூர்ணலிங்க முதலியார் தன்னுடைய புத்திரியைக் கலியாணம் செய்து கொடுத்தாரே? உங்களுக்

குத்தானே?" என்றார். "ஆம். எனக்குத்தான்! நல்லது; உங்களிடம் நான் வந்த விசேஷம் வேறொன்றுமில்லை. அந்த பூர்ணலிங்க முதலியாருடைய வீட்டின் விலாசம் எனக்கு வேண்டும்" என்றேன். இதைக் கேட்டதும் அந்தப் பிராமணன் சிரித்துக் கொண்டே "என்ன ஐயா! உங்கள் மாமனார் வீடு உங்களுக்குத் தெரியாதா? என்ன கேலி செய்கிறீர்களே?" என, நான் "உண்மையில் அவர்களுடைய விலாசம் எனக்குத் தெரியாது. தயவு செய்து சொல்லுவீர்களானால் உங்களுக்கு நான் நிரம்ப கடமைப்பட்டுள்ளவனா யிருப்பேன்" என்றேன். உடனே அவர் "பூர்ணலிங்க முதலியார், 46-வது நெம்பர் வீடு, வெங்கடேசர் தெரு, சென்னை." என்றெழுதினால் அவருக்குப் போய்ச் சேர்ந்துவிடும். நீங்கள் கடிதம் எழுதப் போகிறீர்களா அல்லது நேரிலேயே போகப் போகிறீர்களா?" என்றார். நான் அவர் சொல்லிய விலாசத்தைக் குறித்துக் கொண்டபின் அவரைப் பார்த்து "நீங்கள் கடைசியாகக் கேட்டதன் காரணம் எனக்குத் தோன்றவில்லையே? ஏன், நேரில் போய்ப் பார்த்தாலென்ன?" என்று கேட்டேன். "அடடா! நீங்கள் வித்தியாசமாக நினைத்துக்கொள்ள வேண்டாம். இந்தக் காலத்து மாப்பிள்ளைகள் மாமனார் வீட்டுக்கு அடிக்கடிப் போகமாட்டார்கள். நிரம்ப பிகுவுடனே யிருந்து அவர்கள் பன்முறை யழைத்த பின் அப்பால் இவர்கள் ஒரு முறை செல்லுவார்கள். உண்மையில் இவர்களுக்கு அங்கேயே போயிருந்துவிட இஷ்டந்தான். ஆனால் இதை வெளியே காண்பித்துக் கொள்வதில்லை. இது எங்கும் வழக்கமாயிருக்கிறபடியால் நீங்கள் நேரில் போக விரும்புகிறீர்களோ அல்லது கடிதம் எழுதப்போகிறீர்களோ என்று சந்தேகப்பட்டுக் கேட்டேன்............" என்றிவ்வாறெல்லாம் அனாவசியமான விஷயத்தைப் புராணமாய்ப் புலம்ப ஆரம்பித்து விட்டார். நான் படும் அவஸ்தையில் இவர் புராணத்தைக்கவனிக்க நேரமில்லாமல் அவரிடம் விடை சொல்லிக்கொண்டு அங்கிருந்து ஒரு ரிக்ஷாவிலேறிக்கொண்டு ரிக்ஷா யிழுப்பவனுக்கு வெங்கடேசர் தெருவுக்குப் போகும்படிச் சொன்னேன். மிக்க கஷ்டத்துடன் அந்தத்தெருவில் 46-வது நம்பர் வீட்டைக் கண்டுபிடித்தேன்.

ஆனால் என்ன ஆச்சரியம்! அவ்வீடு பூர்ணலிங்க முதலியாரின் வீடேயல்ல! நான் இரண்டொரு நிமிஷத்திற்கு அவ்வீட்டின் வாயிற்படியிலேயே மயங்கி நின்றேன். எதற்கும் அவ் வீட்டிற்குள் யார்தா னிருக்கிறார்க ளென்பதை யறிந்துகொள்ளும் பொருட்டுக் கதவை தட்டினேன். உடனே ஒரு ஸ்திரீ கதவைத் திறந்தாள். அவளுக்கு நாற்பது வயதுக்குமே லிருக்கலாம். என்னைக் கண்டதும் என்ன விசேஷம் என்று அவள் கேட்க நான், "பூர்ணலிங்க முதலியாரும் அவர் மகள் மீனாள் என்பவளும் இவ்வீட்டில்தா னிருக்கிறார்களோ?" என்றேன். இப்பெயர்கள் கொண்ட பேர்வழிகள் அவ்வீட்டில் கிடையாதென்று அவள் பதில் தெரிவித்தாள். உடனே நான், "இவ்வீட்டிற்கு சொந்தக்காரர் நீங்கள் தானோ?" என, அவள் ஆமென்று தெரிவிக்க "இவ்வீட்டை எப்பொழுதாவது நீங்கள் குடிக்கூலிக்குக் கொடுத்ததுண்டா?" என்று கேட்டேன். அவள் கண்டிப்பாக இல்லை யென்ற பதிலையே சொன்னபடியால் நான் மிக்க ஆயாசத்துடனும் வருத்தத்துடனும் திரும்பி விட்டேன். தன்னுடைய இருப்பிடத்தை நான் கண்டு பிடித்துவிடக் கூடுமென்ற சந்தேகத்தினாலேயே பூர்ணலிங்க முதலியார் தவறான விலாசத்தைக் கந்தஸ்வாமி கோவில் குருக்களிடம் சொல்லி யிருக்கவேண்டும் என்று தெரிந்தது.

அப்பால் என்ன செய்வதென்றே எனக்குத் தோன்றவில்லை. மூளை குழம்ப என் தேகம் தள்ளாடியது. வேறெங்கும்போய் விசாரிக்கத் தெரியாமல் என் நண்பன் ஜகந்நாதனுடைய மருந்து ஷாப்புக்கே சென்றேன். அங்கு என் நண்பனுடைய வேலைக்காரி பொன்னம்மாள் என்பவள் என்னை ஆவலுடன் வரவேற்றாள்.

என்னைக் கண்டதும் அவள் "ஐயா இத்தனைநாளாய் எங்கே போயிருந்தீங்க? இருந்தாப்புலே யிருந்து அன்னிக்கு வண்டியிலே ஏறிக்கிட்டுப் போயிருந்தீங்க; அப்பாலே இப்பொத்தான் உங்களை நானு பாக்கிறேனுங்க. எனக்கு ரொம்ப விசாரமாப் போச்சுங்க. உங்களைக் காணும்னு நேத்து டாக்டர் ஐயாவுக்கு (ஜகந்நாதனுக்கு) என் பொண்ணைவிட்டு லடர் (கடிதம்) எளுதச் சொன்னேனுங்க! நல்லவேளையாக நீங்களே இன்னிக்கி வந்துட்டீங்க" என்று சொல்ல நான், "சரி; நான் வந்துவிட்டேன். இனிமேல் நீ விசாரப்படவேண்டிய காரண மொன்றுமில்லை. பசியா யிருக்கிறது; ஐயரைப் பலகாரம் கொண்டுவரச் சொல்" என்று கூறிவிட்டு மாடி யறைக்குச் சென்று ஒரு நாற்காலியில் அயர்வினால் சாய்ந்தேன்.

நான் மருந்து ஷாப்பில் இல்லை யென்ற விஷயத்தைப்பற்றி பொன்னம்மாள் ஜகந்நாதனுக்கு எழுதியிருக்கிறபடியால் என்னுடைய நடத்தையைப் பற்றி அவன் எவ்விதத்திலாவது சந்தேகங்கொள்ளக் கூடுமென்ற எண்ணம் எனக்குத் தோன்றியது, இதற்காக, நான் மீண்டும் வந்துவிட்டதாகவும், நான் இங்கு இல்லாதபோனதன் காரணத்தைச் சாவதானமாய் நேரிலேயே தெரிவிப்பதாகவும் ஜகந்நாதனுக்கு உடனே தந்தி கொடுத்தேன்.

பசியாறின பிறகு கொஞ்சநேரம் ஆழ்ந்த யோசனையிலிருந்தேன். பிறகு பொன்னம்மாளைக் கூப்பிட்டு "நானிங்கு இல்லாதபோது என்னைத் தேடிக் கொண்டு யாராவது வந்தார்களோ?" என்று கேட்டேன்.

பொன்னம்மாள்:— வந்தாங்க. நீங்கள் இங்கிருந்து போன இரண்டாவது நாள் ஒரு நல்ல பணக்கார வீட்டு அம்மா வந்தாங்க. அவுங்க வந்தபோது மத்தியானம் பன்னண்டு மணி யிருக்குங்க. அவுங்க உங்களைப்பார்க்கணும்னு சொன்னதன்பேரிலே நீங்க ஊரிலே இல்லைன்னு சொன்னேன். நீங்க எப்போ வருவீங்கன்னு கேட்டாங்கோ. நான் எனக்குத் தெரியாதுன்னு பதில் சொன்னேன். அத்தோடே அந்தம்மா போயிட்டு மறுபடியும் அன்னி சாயங்காலம் வந்தாங்க. நீங்க வரல்லைன்னு தெரிஞ்சுக்கிட்டு உங்ககிட்ட கொடுக்கச்சொல்லி லடர் கொடுத்திட்டுப் போயிருக்காங்கோ— என்று சொல்லி ஒரு உறை போட்ட கடிதத்தை என்னிடங் கொடுத்தாள்.

உறையைக் கிழித்துப் பார்க்க அக்கடிதத்தில் பின்வருமாறிருந்தது:—

88, தங்கசாலைத் தெருவு, மதராஸ்.

டாக்டர் லோகநாதன் அவர்கட்கு,

இக்கடிதங் கண்டவுடன் தாங்கள் தாமதம் செய்யாமல் தயவு செய்து என்னை வந்து பார்க்கும்படி நிரம்பவும் மன்றாடிக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

பாலாமணி.

# “ ஆனந்தபோதினி” பஞ்சாங்கம்.

**ஆங்கீரஸஞு கார்த்திகைமூ—கலியுகாதி 5034, சாலிவாகனம் 1855,**

**பசலி 1342, கோல்லமாண்டு 1108, ஹிஜரி 1351,**

**இங்கிலீஷ் 1932ஞு நவம்பர்மூ—டிசம்பர்மூ**

| கார்த்திகை | நவம்பர்மீ / 1932ஞு டிசம்பர்மீ | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 16 | புதன் | திரி34-43 | மிரு31-43 | சித்60 | மூடவன்முழுக்கு, கரிநாள் |
| 2 | 17 | வியா | சது39-43 | திரு37-53 | ம37-53அ | சங்காஷ்ட சதுர்த்தி |
| 3 | 18 | வெ | பஞ்43-40 | புன43-10 | சி43-10மர | அனுஷா கார்த்திகை நா-38 வி-13, சுப மூகூர்த்தம் |
| 4 | 19 | சனி | சஷ்46-33 | பூச47-28 | சி47-28மர | வியாதியஸ்தர் குளிக்க |
| 5 | 20 | ஞா | சப்50-23 | ஆயி50-8 | சி50-8மர | நவக்கிரகசாந்தி செய்ய |
| 6 | 21 | திங் | அஷ்47-33 | மகம்51-10 | ம51-10சி | கிருஷ்ணஷ்டமி, கரிநாள் |
| 7 | 22 | செவ் | நவ45-8 | பூரம்50-33 | சி50-33அ | தனுராயனம் நா-28-3 |
| 8 | 23 | புத | தச40-58 | உத்47-38 | அ47-38ம | விவாகம், சுப மூகூர்த்தம் |
| 9 | 24 | வியா | ஏகா34-55 | அஸ்43-5 | சித்60 | சர்வ, மத்வ ஏகாதசி |
| 10 | 25 | வெ | து27-28 | சித்37-20 | சித்60 | பிரதோஷம், கரிநாள் |
| 11 | 26 | சனி | திர18-50 | சுவா30-20 | அ30-20சி | அவமாகம், 10-க்குள் மழை |
| 12 | 27 | ஞா | சது9-30<br>அ●59-48 | விசா22-43 | மர60 | சர்வத்திர அமாவாசை, அவமாகம் |
| 13 | 28 | திங் | பிர50-18 | அனு14-58 | சித்60 | |
| 14 | 29 | செவ் | துதி41-30 | கே7-28 | மர7-28அ | |
| 15 | 30 | புதன் | திரி33-53 | மூல0-45<br>பூரா55-25 | மர0-45அ | |
| 16 | 1 | வியா | சது27-48 | உத்51-53 | சித்60 | |
| 17 | 2 | வெள் | பஞ்23-35 | திரு50-18 | மர50-18சி | |
| 18 | 3 | சனி | சஷ்21-28 | அவி50-50 | சி50-50அ | |
| 19 | 4 | ஞா | சப்21-38 | சத53-20 | சித்60 | |
| 20 | 5 | திங் | அஷ்23-40 | பூர57-40 | மர57-40சி | |
| 21 | 6 | செவ் | நவ27-38 | உத்60 | அமி60 | |
| 22 | 7 | புத | தச32-53 | உத்3-38 | சித்3-38ம | |
| 23 | 8 | வியா | ஏகா39-0 | ரே10-33 | சி10-33அ | சர்வ, மத்வ ஏகாதசி |
| 24 | 9 | வெள் | து45-20 | அஸ்17-58 | அ17-58சி | மச்ச, அகண்ட துவாதசி |
| 25 | 10 | சனி | திர51-50 | பர25-25 | சி25-25அ | அனங்க திரயோதசி |
| 26 | 11 | ஞா | சது57-53 | கி✻32-45 | சித்60 | கிருத்திகை, அண்ணாமலை யார்தீபம், பாஞ்சராத்ரதீபம் |
| 27 | 12 | திங் | ○60 | ரோ39-40 | அமி60 | பௌர்ணமி, வைகாநஸதீபம் |
| 28 | 13 | செவ் | பவு3-33 | மிரு46-3 | சி46-3மர | வியாதியஸ்தர் குளிக்க |
| 29 | 14 | புதன் | பிர8-30 | திரு51-45 | சித்60 | தனுசுரவி நா-55-43, மூலா கார்த்திகை நா-55-43 |

| | | | |
|---|---|---|---|
| | | | |
| ராகு | 6-துலா-சுக் | | |
| சனி | | | செவ் குரு கே |
| | சூரி புத | | சுக் |

**Printed & Published by N. Munisawmi Mudaliar,**

**at the “Ananda Bodhini” Press,**

**No. 6, Lawyer Chinnathambi Mudali Street, Madras.**